உ

சிவமயம்.



பெரியபுராணம்

அறுபத்துமூன்றுநாயன்மார்களுள் ஒருவராகிய

திருநாளைப் போவா ரென்னும்

# நந்தனார் சரித்திரக்கீர்த்தனை.

## சிதம்பரக்கும்மி.

இஃது.

கோகுலாபுரம்

அருணாசலமுதலியாரால்

பார்வையிடப்பட்டு.


திருப்பதி.

இரத்தினமுதலியாரவர்களது

கலைக்கியானமுத்திராக்ஷர சாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1891-ல

உ

கடவுள்துணை





# விளம்பரம்



இதனால் சகலமானவர்களுக்கும் அறிவிப்பது யாதெனில் சென்னப்பட்டணம் பெத்துநாயக்கன்பேட்டை முத்துகிருஷ்ணன் தெருவில் கிழண்டைவாடை ௩௯ நெம்பர் வீட்டில் இருக்கும் ம-ா-ா-ஸ்ரீ திருப்பதி இரத்தினமுதலியாரிடத்திலும், பண்ணுருட்டியில் புஸ்தகவியாபாரஞ்செய்யும் சின்னசாமிநாயகரிடத்திலும், திண்டிவனம் புஸ்தகவியாபாரஞ்செய்யும் தணிகாசலமுதலியாரிடத்திலும், புதுவை ராஜவீதி ௩௪-வது நெம்பர் வாயில் புஸ்தகவியாபாரஞ்செய்யும் அரியபுத்திரநாயகரிடத்திலும், கணேசர்ஜாவளி, சாஸ்திரஜாவளி, பழனியாண்டவர்ஜாவளி, ஷை இரண்டாவதுபாகம், கெல்லையம்மநாடகம், சயிந்தவநாடகம், ஸ்ரீவள்ளியநாடகம், பதினெட்டாம்போர்நாடகம், இந்திரசபா, பத்மினிசபா, பவழேந்திரசபா; பதினெண்சித்தர்கள் திருவாய்மலர்ந்தருளிய சில்லறைக்கோர்வைகளும், இன்னும் பலவித தமிழ்-தெலுங்கு வயித்திய ஜோதிடங்களும், பெரியோர்களால் செய்யப்பட்ட சாஸ்திரங்களும், புஷ்பரதச்செட்டியார்புஸ்தகங்களும், நாவலர்புஸ்தகங்களும், டிபோபுஸ்தகங்களும், இன்னும் வேண்டியபுஸ்தகங்களும் விலை சகாயமாக விற்கிறபடியால், வேண்டியவர்கள் ஷை யாரிடத்தில் விலைக்கு வாங்கிக்கொள்ளலாம்.

இப்படிக்கு.

ம-ா-ா-ஸ்ரீ. தி - இரத்தினமுதலியார்.

உ

திருச்சிற்றம்பலம்

# கதையின் வரலாறு

திருவெண்ணீறுதரித்த பரமசிவனார் திருக்கொலுவிற்றிருக்கும் வெள்ளிமலையானது இமயமலையின் பக்கத்திலிருக்கின்றது; அது பெரியோர்கள் பரிசுத்தமனம்போலவும் படிகம்போலவும் பலவுலகிற் புண்ணியங்களெல்லாம் திரண்டிருந் தொருவடிவாகப் பிரகாசிக்கின்றதுபோலுமிருக்கின்றது அதில் இருக்குயசுராசாமம் அதர்வணம் என்னும் நான்குவேதங்களின் ஓசையும் வித்தியாதரர்கள் வீணையோசையும்; யானைகளுடைய முழக்கமும் வானதுந்துபிமுழக்கமும் இடைவிடாதிருக்கின்றன அன்றியும் தேவர்கள்சிரமாலைகளும் கற்பகமாலைகளும் நற்பலமுனிவர்கள் அர்ச்சனைசெய்து சார்த்துமலர்மாலைகளும்; அம்மலைப்பாங்கெங்கணுஞ் செறிந்திருக்கின்றன அதுவுமமரர்-சித்தர்-அசுரர்-தைத்தியர்-கருடர்-கின்னரர்-நிருதர்-கிம்புருடர்-காந்தருவர்-இயக்கர் விஞ்ஞையர் - பூதர்-பைசாசர்-அந்தரர்-முனிவர்-உரகர்-ஆகாயவாசிகள்-போகபூமியர் என்னும் பதினெண்கணங்களுந் துதிக்கப்படத்தக்கது அக்கயிலாயமலையின்மேல் கோடாகோடி சூரியப்பிரகாசம்போலும்விளங்குகின்ற நவரத்னங்கள்பதிக்கப்பட்ட திருக்கோயிலுக்கு; முதற்கோபுரவாயிற் காவற்றலைவர் நந்திதேவர் அவர் பரமசிவன் திருப்பணிவிடைகளுக்கும் திருக்கொலுவிற்கும்; அதிகாரத்தலைவர் அவர் உடைவாளும் திருப்பிரம்பும்பெற்றுங் கைலையைக் காக்கப்பட்டவர் தேவர்முதலான யாவருக்குமேலானவர் பரமசிவனிடத்து அதிகபத்தியும் அன்புமுடையவர் இவரால் இரவும்பகலும்; இடைவிடாமற் காக்கப்பட்ட வெள்ளிமலையென்னும் கைலாயத்தின் அடிவாரத்தில் எச்சமயங்களிலும் நிச்சயசமயம் சைவசமயமென்றும் எக்கடவுளிலும்; பரமசிவனே மெய்க்கடவுளென்றும் அறிந்தவர் உபமன்னியமகாமுனிவர் இவர் சிறுவயதிலுடையதலையின்மேல் தம்முடைய கிருபையால் திருப்பாற்கடலைக் கொடுத்தவர் சிவனிடத் திடைவிடாதவன்புள்ளவர்

இந்த உபமன்னியமகாமுனிவர் தம்மிடத்தில் அடியார்களும் பெரியோர்களும் முனிவர்களும் புடைசூழ்ந்திருக்கின்ற சமயத்தில் அவ்விடத்தில் ஆயிரஞ்சூரியகிரணங்கள் ஒன்றுகத்திரண்டாற்போலும் ஒருபிரகாசந்தோன்ற அங்கிருந்தவர்களெல்லாரும் உபமன்னியமகாமுனிவரைநோக்கி இதென்னஆச்சரியம் இப்படிப்பட்டபிரகாசந் தோன்றவேண்டியகாரணமென்னவென்றுகேட்க;

உ

சிவமயம்

# திருநாளைப்போவாரென்னும்

# நந்தனார்சரித்திரக்கீர்த்தனை.

கற்பகவிநாயகர் துதி

காப்பு வெண்பா

சுந்தன்றனையளித்த காதலனார்பேருபெற்ற
நந்தன்சரித்திரத்தை நானியம்பச்-சுந்தரஞ்சேர்
தில்லைமணிகோபுரத்திற் றேடிவளர் கற்பகத்தாள்
அல்லும்பகற்றுணையேயாம்.

முக்குறுணிவிநாயகர் துதி

விருத்தம்.

நந்தணிகரத்தான்றில்லை நாயகனருளால்வந்த
கந்தன்முக்குறுணியான்றன் கனிந்தபொற்றாள்வணங்கி
நந்தன்பேருட்பாலுண்ட நற்புகழ்ச்சொலிப்பிலேபரா
நண்புடனுதினாளும் நலமுடன்வாழ்குவேனே.

சபாபதி தோத்திரம்

கலிவிருத்தம்.

தக்ககீர்த்திகொள் நந்தன்சரித்திரம்
மிக்கதையை யெடுத்தேவிளம்பிட
செக்கர்கோனியன் தில்லைச்சபைதனிற்
றக்கத்தோமெனுந் தாள்கள்சிரங்கொள்வாம்.

சிவகாமி தோத்திரம்

விருத்தம்.

பாம்பணைத்தந்தையாகப் படைத்துப்பின்பெவருங்காணாப்
பாம்பினைப்பணியாக்கொண்ட பரையருட்பாதமேத்திப்,
பாம்பினிற்புலியும்பாம்பும் பார்த்திடாநந்தனுங்கண்
டாம்படிமுத்திதந்த வருங்கதைப்பகருவேனே.

சுப்பிரமணியர்-செய்வானை-சரஸ்வதி
இலக்குமி-விஷ்ணு இவர்கள் துதி

விருத்தம்.

சச்சிதானந்தசதாசிவனைச்சார்ந்த நித்தியாநந்தநந்தன்
உச்சிதக்கதையைக்கீர்த்தனையாக வுலகெலாந்துதித்திடச்சொல்ல
அச்சிலைவேற்கையறுமுகன்றெய்வ யானைசெங்கலைமகள்கமலை
பச்சைமான்மற்றும்பரவியதேவர் பாதபங்கயம்பணிகுவமே.

௬௩-நாயன்மார் தில்லைமூவாயிரவரியவர்கள் துதி.

விருத்தம்.

வாதவூரடியாரோடு மற்றறுபத்துமூவர்
பாதமேவணங்கித்தில்லைப் பதிதனிலாருமேவும்
போதமூவாயிரத்தோர் பொன்னடிக்கமலமுன்னி
ஓதுநந்தன்சரித்திர முரைத்திடத்துணிந்தாமே.

அவையடக்கம்.

விருத்தம்.

சிற்பிகள்காண்போர்சிந்தையுருவக்கச் செப்புநல்லின்புரத்திட்டுப்
விற்பனங்கண்ட வழிவிலாவெழுதும் விதமெனமுத்தமிழென்னுஞ்
சொற்புகழ்க்கல்வித்துறையெலாந்தெரிந்த தூயநற்புலவர்முன்கொலிப்
பொற்புறவிசைக்குங்கீர்த்தனமிதனை புவியிலிசைமகிழ்ப்பர்களாமே.

விநாயகர் துதி.

தரு-இ ம்-மோகனம் ஆதிதாளம்

பல்லவி.

கணநாதா சரணம் காதந்தருள்
கணநாதா சரணம்

அநுபல்லவி.

பணமார்செடன்றூங்கிய பார்மீதினிலே ஜெநம்
குணமாரநந்தன்சரித்திரக்கிருபைகண் பாரும்(கண்)

சரணங்கள்.

சொல்லும்ப்ரணவமூலா தூயவேதாந்த நாதா
துலங்குமுனிவர்மனத் துகளறுத்தருட் போதா
நல்லமோதகமுதல் நாடிமூகர் விநோதா
நாயேன்சொல்லுந்தமிழை நாடிரட்சிக்குந் தாதா(கண்)
அம்பரமாண்மன்றுளாடும்பர னளிக்க
அனாநொடியிதுவலமாகியனங் களிக்க
உம்பர்பிரானுகந்து உயர்மாங்கனி யளிக்க
உள்ந்தளராமலுண்ட முதல்வாதுய ரொழிக்க(கண்)
தேசோங்கரவதரச் சிகரமேலைக் கோபுரத்
தேவிற்றிருக்குமெங்கள் தேவாருண்ட லாதர
பூசித்தவர்க்குவரம் புகுந்தருளு மாதர
பூமிசைநாடகஞ்செய்யுந்தவோ மாகர(கண்)

புராணிகர்சொல்-விருத்தம்.

வளப்பெறுதருமமோங்கியவாத
வானூரினில்வாழ்ந்திடும்புலையர்
உளமகிழ்ந்தெங்கள் குடிப்பெயர்விளங்க
வுதித்தநற்றீபமேமணியே
களங்கிலாக்கதிரோயெனப்புகழ்ந்தோதக்
கவித்தசீர்நந்தனார்சரித்திரம்
விளம்பிடமுதலிற்றோடயம்பாடித்து
மேன்மையுமிகப்படித்தனனே

தோடயம்.

இராகம்-நாட்டை-ஆதிதாளம்

திருவளர்தருமாத னூரார்சேரிதனிற்குடிலவதார
தருமநெறிநந்தனார்ப் பேரார்சரித்திரமதனைச்சொல்லவே-ஆ-ஆ
அருள்வளர்கஜமுக சாமிஅம்பிகைதந்தாளுஞ்சாமி
அங்குசங்கரதலசாமி அப்புயத்தாணிதந்துணையே செய
வண்டணிமாமலர்த் தாரணமண்டலவாழ்த்தியதீரன்
பண்பெனியற்கு தாரன்பன்னுங்கதைசொல்லவே-ஆ-ஆ

ஆ திருநாளைப் போவாரென்னும்

புண்டரீகபுரத் தண்டலர்மாமன் — தீசன்புராரியுளமகிழநேசன் வாசன்தாமரைத்தாள்கடுணையே செய

விருத்தம்.

சங்கரன்றனக்குஞ்சண்முகன்றனக்கும் சதுர்முகப்பிரமனூர்தனக்கும்
பங்கயமார்க்குங்காமனையட்கும் பார்கட்பாவலர்தமக்கும்
தங்கிட வட்டவசுக்களானவற்கும் சதுர்மறையோதுமந்தணற்கும்
பொங்கியமூவாயிரர்நந்தனுருக்கும் பொதுப்படமங்களம்புகல்வாம்.

மங்களம்.

தரு-இ-ம்-அசாவேரி-அடதாளம்

பல்லவி.

ஆதிமத்தியாந்தனுக்குமங்களம் எங்கள்
ஆனந்தநந்தனூர்க்குமங்களம்

அநுபல்லவி.

பாதிமதிநதியும் பாம்பும்புலி யரியும்
சோதிக்குழையணியுந் துலக்கவருட் புரியும் (ஆதி)

சரணங்கள்.

தில்லைவடிவழகிற் சிறந்தொருபெண் ணுக்கு
சில்வளைத்தயரசி ராமம்ஸ்கோவத்தைப் போக்கி
தில்லைபச்சமந்துபெரு மடிவிலொருகாற் றாக்கி
மாநடனங்கள்செய்த மாயமானினை யெய்த (ஆதி)

குருபரனைதருக்குங் குறமகட்பாக ருக்கும்
அருணகிரிநாதனுக்கும் அருள்செய்விசாக ருக்கும்
ஒருமுருகாவென உளங்களித்தவ ருக்கும்
உம்பர்கோவுக்கந்த யராசினைத் தந்த (ஆதி)

சக்கரைமுக்கனியவல் தன்னைநுகர் நாதர்க்கும்
சகலதேவர்நாகருஞ்ச சகலவசக்க ளுக்கும்
பக்குவமாகவிமைத பாடுஞ்சங்கீத ருக்கும்
பார்மதுட்கும்பங்கடப் பாவையர்க்கும் உமைய (ஆதி)

பெரியபுராணச்செய்யுள் விருத்தம்.

திருமறையோர்புராண மனைவபதின்மறன்றுசிவ
வேதியாரனைவழிப்பட்ட புராண்மீரிரண்டு
சுழன்மாமாத்திரசொன் றழுமொழுமடிமன்னர்
குறுநிலமன்னவனா வாலணிகர்குலத்தையவர்

திருமைமெரிவேளாளர் பதின்மூவரிடையர்
ஓருவர்சாலியர்குயவர் தயிலவினையாளர்
பரதவர்சான்றார்வண்ணார் சிலைமறவர்நீசர்
பாணரிவரோரொருவராம் பகருங்காலே

உபமன்னியபகவான் ரிஷிகளுக்குச்சொல்லியவசனம்.

இவ்வுலகில்பெரிதாகிய வேதசாஸ்திரங்களுக்குள்ளே மிகவுஞ்சாரமாகியபரமசிவபத்தியையுண்டுபண்ணுகிறபத்திவிலாசத்தை உபமன்னியபகவானானவர் அனேகரிஷிகள்கேட்கச்சொல்லுகிறார் பெரியபுராணமென்றுசொல்லப்பட்டநூல்சேக்கிழார்சுவாமிகளாலே செய்யப்பட்டது ஸ்காந்தபுராணத்திலும் இன்னமனேகபுராணங்களிலுஞ்சொல்லப்பட்டபத்திமார்க்கங்களாகிய கடலிலே நீரைக்கையாலள்ளிக்குடித்ததுபோலச்சிலதுகீர்த்தனங்களினாலும் விருத்தங்களினாலுஞ்சிவபக்தர்கள்சரித்திரங்களைக்கொண்டாடுவதுபோல்உளறினேனென்றுசிதம்பரகோபாலகிருஷ்ணையனபெரியோர் அடிவணங்கி ஆனந்தம்பெருகிச்சொல்லியதிருநாளைப்போவார்சரித்திரத்தையாவரும் வினவிகேட்கும்படிசிரம்வணங்கிவினவினேன் சிவாகமம் ஸ்காந்தம் பாரதம் பாகவதம் பகவத்கீதை முதலாகிய பக்திஞானவைராக்கிய சாஸ்திரங்களிலேமிகவுஞ்சாரமாகியபரமசிவத்தை பத்திபண்ணாமல் இதரவேதபாராங்கதனாயிருக்கின்றபிராமணனைப்பார்க்கிலும்பரமசிவம்பாதாரவிந்தபத்திபண்ணுகிறவன்பறையனாயிருந்தாலும்பதினான்குலோகத்தையும் பரிசுத்தம்பண்ணுவானென்று உபமன்னியபகவான்சொல்லஅதற்குரிஷிகள்சொல்லுகிறார்கள் பத்திஞானவயிராக்கியங்களைத்தெரியப்படுத்தாநின்றவேதபுராணங்களைப்பார்க்க அரியராம் அன்றியில்அவிவேகிகளாயிருக்கிறசண்டாளர்களுக்கு எப்படிபத்தி வருமென்று ரிஷிகள்கேட்க உபமன்னியபகவான் சொல்லுகிறார்,

உபமன்னியபகவான் ரிஷிகளுக்குச் சொல்லுகிறார்

நொண்டிச்சிந்து-இ-ம்-புன்னாகவராளி.

பழனமருங்கணைபுய்புலைப்பாடியதுகூரைவீடுதனில் சிறையோபடர்ந்திருக்கும்அதைச்சுற்றிலும்மாய்கள்குலைத்திருக்கும் பறந்தோடிவட்டமிடும்இளம்பச்சைப்பிசினைதமேலிச்சைகொண்டு கோழிகூவுங்கூக்குரலும்பாழுங்கொல்லையருகினில்வெள்ளெலும்பும் நரம்புங்குவித்திருக்கும்சிறுகத்தைகடம்வலுத்திருக்கும் தோலூருங்கேணிதனில்வெகும்தோலைப்படும்வாடைசொல்லரியப்பரம்போஅடித்திருக்குவயற்பக்கங்களில்மேத்தநொக்கெலும்பும் கிழித்தோல்நரம்புகளும்

அவர்க்கிளமில்லைசிறுமிளுலரும்தெருவில்விளையாடிக்கொண்டு அவர்
தெந்தினம்பாடுவார்சுத்தமாயிலுப்பைமணியரையில்கட்டி இண்டந்
தலைகளில்பூண்டிருக்கும்சம்பந்தோடுகாதலனியும்அருந்தாவடமேயவர்
தாவிடமாய்மணியோதரித்திருப்பார்தெருவாசற்புரங்களிலே சிக்கிக்
கொண்டுகொண்டாட்டமாயிருப்பார்கையைகொட்டிக்கொண்டுதனக்
கிஷ்டமுடன் மதுவுண்டு கெக்கலிப்பார் பறைவாத்தியமும் வெகு
நேத்திபுடன்இருககுமபுலைபாடிஅத்தீசன்திருவடி நேசமுடன்தரி
க்குமழருபுலையர் அவர்சாதிமுறைமைதவராமல்நந்தனாரவாபெயராம்
வெகுநல்லவராயிந்தத்தொல்லுலகில்அவரோசிவனடியார் அவர்க்காரு
மொருநிகரில்லைதாரணியில்கோடிகோடிஜென்மங்களோமுன்னஞ்சுற்றம
முச்செய்தநற்றவமே அவதாரமான துவோஈசன் அன்புபுரியும்பேரின்
பசுகம்கொள்ளைகொள்ளவோபிறந்தார் திருக்கோயில்வலஞ்சுழன்றுவ
லுடன்கொய்யும்பணிவிடைகள்ஈசன்சிந்தைமகிழ்ந்தருளிடவெ
மத்தளபேரிகைக்கும்இசைவார்கொடுத்தும்புறந்தோல்கொடுத்துமரா
வாமலைதிளாமம்நல்லவாசம்பெருகுங்கோரோஜனையும்தேவாலயங்க
ள்தோறும்தந்துபித்தமுறுகிய பத்திவெள்ளம் பொங்கோடிககங்குக
றைஎன்றுபேதமறியவொண்ணாதுகண்டர்சாதியில்நீச்சரவர்பேணிச்
சாருந்தொழின்முறையாரும்புகல்திருப்புன்கூர்ச்சென்றரனைக்கண்டு
சேவித்திசைபாடிப்பாவித்தபின்தில்லைச்சிதம்பரத்தைக்கண்டுசேவி
க்கவேண்டுமென்றுவலுடன்நாளைப்போவேனென்றுராம் தன்னோ
டும்பறையர்களோடிவந்துஅன்னை போகாதே நமக்காண்டைபொ
ல்லாதவன்வேண்டிக்கொள்ளான்பப்பரசாதியுண்டே இன்னபாடுப
டுமுழக்காடுமங்கேநமக்குந்திருநாளோ அந்தணாயமுண்டோஎன்ன
மாயமிதுவென்றேதடைசெய்தார்சிவன்வேடிக்கைத்தானென்று ந
டிக்கொண்டேஅறியாதுபோலிருந்தசெம்பொன்னம்பலத்தாடியைக்
கும்பிடவேஆசைநார்தனிலிருந்துகிடும்அம்புபோலப்பறந்தையரின்
றித்தில்லையருகில்வந்தார்மனந்தேறிக்கொண்டார்குறையாரிக்கொண்
டார்கெண்டாமணியோசைகாதில்கேட்குதென்றுரதைப்பார்க்கவெ
ண்டேகொண்டாட்டமாகவந்தார்கைபக்குவித்துக்கொண்டேதனக்
கம்பிட்டதோவென்றேமனமகிழ்ந்தார்தெருவீதியிலேவந்து காவலு
டன்கண்டார்களையாநீஇருக்கண்களிலானந்தம்பொங்கிடவேநின்றார்
மகிழ்புறத்தேவெதநேத்திவென்றுநிதைப்பார்த்த தில்லைபணிந்தார்
பாவரைமாய்நல்லபாக்கியசாலிகளாகுமென்றார்இதுதானோதில்லைப்பதி
யென்றுஎக்கலித்தாராடிகெக்கலித்தார்ஐயாவுன்சந்நிதியோநான் ஆ
சைகொண்டுவந்தேனேசமுடன தெருவில்பொடித்தூளை அள்ளித்
தேகமுழுதிலுந்தாகமுடன்தரித்தார்திருநீறுப் நாலுசாஸ்திரவேதங்
கள்பார்த்தாணரும்பெரியோரிருக்குமிடம் இந்தப்பேயனிருப்பதுஞா
யமல்லநானோபறைச்சாதிதில்லைநாதன்தரிசனமாதரவாயப்பண்ணைப்
படுபாவிஅந்தப்பாரிலிருப்பதுசீரல்லவேஎன்றேகுளத்தோரம்புக்கு
எங்கிநின்றார்ஓயாப்பெருங்கவலைகொண்டு உள்ளங்குழைந்திடவெள்
ளமெனக்கண்ணீர்காபுரள இருகைதொழுதாரவர் மெய்தொழுதார்

கிழெபுரண்டழுதார்ஒன்றுங்கேள்விமுறையில்லையோகாதாவென்றே தலைகுனிந்தார்எந்தன்வேதனையைக்கண்டு ஆதரிக்குந்தெய்வமிடை யாதோபாவி சித்தந்தெளியவிரத்திதந்து வாவென்றழைப்பாரோவி ண்ணில்வானவர்கள்போற்றுமூனமிலாக்கனகசபைநடனம் தண்ணீர் காட்டகளித்திடநாயடியேன்வருந்தித்துதிப்பேனோஎந்தன்கலனுரு ருகுதுவினையேஅடடாயிதென்னவென்றுஉயிர் அந்நகர்வீதியை ச்சுற்றிவந்தார் இரவும்பகலோ யாரதைநாசன்கண்டு விசுவாசமுடன் பாலகிருஷ்ணன்பணியுத்திருநட்பாதமுள்ளதில்லைநாயகனே கனவிலு ருவாகிவந்துகாட்சிகொடுத்துக் கடாட்சித்தபின் எரியினிடைமூள்கி வெகுஇன்பம்பெரியஅன்ப நடன்வேதமுனிவடிவாய்த்தில்லைவேதி யர்கைதொழுதார் அங்கம்புளகிதயாய்ச்செம்பொனம்பலத்தாடியசம்பிர மத்தைக் கண்டாரதிக்கிலரால்.

கீர்த்தனம்-இ-ம-எதுகுலகாம்போதி-சாப்புதாளம்.

பல்லவி,

நீசனாய்ப்பிறந்தாலும் போதும்
ஆசையுடனம்பலவனடையிருந் தாலும் (நீச)

சரணங்கள்.

கோடிலாத்தவங்கள் புரிந்தாலும்-தங்கள்
குலவண்மைதவறாதநெறியி லிருந்தாலும்
வேதமுடியாவுமுணர்ந் தாலும்-மாயை
விலகாதுஒருநாளுந்துலையாது துன்பம்நீசனா
களவுகொலைசெய்து வந்தாலும்-பழிக்
காரருடன்எந்நேரங்கூடியிருந் தாலும்
வளமறவேவாழ்வுகெட் டாலும்-நல்ல
மனிதனவனிடமாகமறலியணு காது-நீசனா
எத்தகருமங்கள்செய் தாலும் எங்கு
மிடையாதகொடையாளியெனவிருந் தாலும்
தோத்திரக்கீர்த்திமிகுந் தாலும்-எங்கள்
கோபாலகிருஷ்ணன்தொழும்பாதம் நினையா-தோன்-நீசனா

வசனம்.

இப்படியேபத்திசெய்தால்போதும்மற்றசாதிவருணாச்சிரமங்களினாலேஒன்றும் பிரயோசனமில்லையென்றும் ஒருஇதிகாசத்தைச்சொல்லுகிறார்பூர்வத்திலேதில்லைவெட்டியானென்றுஜாம்பவனென்றும்ஆதநூர்நந்தசாம்பவனென்கிறதிருநாளைப்போவானென்றும்பெயர்பெற்றஇம்மூன்றுபேர்களுந்திருச்சிற்றம்பலத்தை அடைந்தார்கள்இம்மூன்றுபேர்களில்நந்தசாம்பனென்பவர்மாத்திரம்தில்லைமூவாயிரம்பேர்களும்பார்க்கச் சாபப்பிரவேசமானதொன்றுசொல்ல ரிஷிகளெல்லாரும்ஆநந்தமடைந்துஉபமன்னியமகாரிஷியைப்பிரதட்சணஞ்செய்துபாடிவணங்கிஅஞ்சலிசெய்துஒஸ்வாமி எல்லோரும்பார்த்திருக்கையில்முத்தியடைந்த திருநாளைப்போவாரென்னும் பெயர்படைத்துப்பேறுபெற்றசிவபத்தருடையசரித்திரத்தைச்சொல்லுங்களென்றுரிஷிகள்பிரார்த்தித்துக் கேட்கும்போது உபமன்னிய மகாரிஷியானவர்மிகவுஞ்சந்தோஷமடைந்துஈஸ்வரனுடைய குணங்களைவர்ணிப்பதைபார்க்கிலும்ஈஸ்வரபத்தர்களுடையகுணங்களைசொல்லுகிறதுமெத்தவும்புருஷார்த்தமென்றுசொல்லத்தொடங்கினார்சிதம்பரத்துக்குநாளைக்குப்போவேனென்றுசிலதுநாள்நந்தன்சொல்லிவந்தபடியாலநந்தனுக்குநாளைப்போவாரென்றுநாமதேயமுண்டாச்சு ஆகிலும்ஈஸ்வரனுடையகுணங்களைச்சொல்லினாலும்சொல்லலாம் பத்தர்களுடையகுணங்களைச்சொல்லயாவர்க்குந்தெரிந்தமட்டுஞ் சொல்லுவோமென்றுமயிர்சிலிர்த்து ஆனந்தக்கண்ணீர்வடித்து மனங்களித்துப்பரமசிவனைநினைத்துவாயால்துதித்து ஆத்துமா ஆத்துமிகளாயிருக்கின்றதாபத்திரியங்களினாலேவருத்தத்தைபடைந்திருக்கின்ற செந்துகளுக்கு அமிர்தவருட்சிதம்போலே நந்தனுடைய புண்ணியத்தால் அமிர்தத்தை வருட்சிக்கத்தொடங்கினார்,

கீர்த்தனம்-இ-ம்-சங்கராபரணம்-ஆதிதாளம்

பல்லவி.

நந்தன்சரித்திரமானந்தம் ஆனாலுமத்தி
யந்தம்பக்திரச கெந்தஞ்சொல்லச்சொல்ல நந்தன்

நந்தன்சரித்திரம் வெகுஅந்தஞ்சிவனாருக்குச்
சொந்தந் தொலையும்பவபந்தம் கேட்டபேர்க்கு நந்தன்

ஏதுஇவனைப்போலேசாது பூமியிலிருக்
காதுஅரிதுஇரு காதுபடைத்தபேர்க்கு நந்தன்

வாடிமனதிளகிப்பாடி அரகராவென்
றாடிகனகசபை நாடிச்சேருவேனென்ற நந்தன்
அண்டர்கொண்டாடுஞ்சோழமண்டலந்தன்னைசூழக்
கொண்டதேற்காநாட்டில் விண்டஆதரிநூல்வாழ் நந்தன்

கீர்த்தனம்-இ-ம்-மாக-ஆதிதாளம்,

பல்லவி.

திருநாளைப்போவார்சரித்திரம்
தேனிலும்பாலிலு மினியதுகண்டீர் திருநா
சித்தமுருகிய சிவயோகிகளுங்
கர்த்தரிதுவென் றனுதினமடபணியும் திருநா
மேதினிபுகழுமாதநூர் விளங்கவந்தமாதவஞ்சாதனைபெருகிய
பேதமில்லாதவன் வேதகுருபரநாதனைப்பணியும் திருநா
மனதில்குற்றமில்லாதவன் நிந்தைவஞ்சனை மாயகைசொல்லாதவன்
கனவிலும்நினைவிலும் சிவபதம்குருபதம் திருநா
கருத்துனாகரித்திடப்பெருத்திடவாசனும்
சாதிமுறைதவராதவன் பவசாகரத்திடைமுழுகாதவன் திருநா
புதமாயாதிக ளாகியவுலகம்
பொய்யிதுமெய்யிது வல்லவென்றறிந்திடும் திருநா

பெரியபுராணச்செயயுள்.

விருத்தம்.

பகர்ந்துலகுசீர்போற்றும் பழையவளம்பதியாகும்
திகழந்துபுனற்கொள்ளிடம்பொன் செழுமணிகதுனைக்கரத்தான்
முகர்ந்துதரவிருமருங்கு முளரிமலர்க்கையேற்கும்
அகன்பனைநீர்நன்னாட்டு மேற்காநாட்டஆதநூர்

வசனம்.

கொள்ளிடத்துக்குச்சமீபமாகியஉலகமெல்லாம்புகழும்படிக்கீர்த்திபெற்றிருக்கின்றஅமராபதிஅளகாபுரிபட்டணத்தைத் தோற்கச்செய்யும்மாடமாளிகைகூடகோபுரத்தோடும்அணிமாதிகள் வெள்ளாட்டிகள்வேலைசெய்யும்செல்வத்தோடும்வேதவேதாந்தத்துவஞானமதிர்துசாட்சாத்காரம்பெற்றவேதியரோடும்மற்றமூன்றுவருணச்சி

ரமங்களாலேசூழப்பட்டு பூலோகத்திலதிகமென்று சொல்லப்பட்ட
ஆதநூரென்னும் கிராமத்துக்குவெளியில் நடுநஞ்சை நிலங்களாலே
சூழப்பட்டிருக்கின்றகடைசாதியார்குடியிருக்குஞ் சேரியைக்கொண்
டாடிச்சொல்லுவானேனென்றால் ஸ்காந்தபுராணத்தில் அஞ்சுபோக
கண்டத்திலே சிவபத்தன் குடியிருக்குஞ் சேரியைக் கைலாசமென்
று வருணித்துச் சொன்னபடியால் உபமன்னியபகவான் மிகவுங்
கொண்டாடிச் சொல்லுகிறார்.

சிந்து.

பழனமருங்கணையும்புலைப்பாடியதுகூரைவீடுதனில் சுரையோப
டர்ந்திருக்கும்அதைச்சுற்றிலும்நாய்கள்குலைத்திருக்குமடாந்தோடி
வட்டமிடும்இளம்பச்சைப்பிசிறைதபேய்ச்சைகொண்டுகோழிகூவுங்கூ
க்குரலும்யாழுங்கொல்லையருகினில்வெள்ளெலும்படும்நரம்புங் குவித்
திருக்கும்பலநெட்டிபிதித்திடுங்குட்டைகளில் நண்டோகுடியிருக்கு
ம்சிறுநத்தை நமடம்வலுத்திருக்கும் தோலூறுங் கேணிகளில்வெகு
தொல்லைப்படும்வாடைசொல்லமியாப்பரம்பே அடித்திருக்கும்வயற்
பக்கங்களில்மெத்தநொக்கெலும்பும் கிழித்தோல்நரம்புகளும் அவர்க்
கிணையில்லைசிறுமீனுலருந்தெருவில் விளையாடிக்கொண்டுஅவர்தெந்தி
னம்பாடிவோர்சுந்தரமாம்இலுப்பைமணியரையில்கட்டிஇண்டந்தலை
க்களில்பூண்டிருக்கும்சங்குதோடுகாதணியும் அருந்தாவடமே யவர்தா
விடமாய்மணியோதரித்திருப்பார்தெருவாசற்புறந்தனிலேசிக்கொண்
டுகொண்டாட்டமாயிருப்பார்கையைக்கொட்டிக்கொண்டு தனக்கிஷ்
டமுடன்மதுவுண்டுகெக்கலிப்பார்பறைவாத்தியமும் வெகுநேத்தியு
டனிருக்கும்புலைப்பாடிஅதில்ஈசன்திருவடிநேசமுடன்தரிக்கும் ஒ
ருபுலையர்அவர்சாதிமுறைமை தவராதவராம் நந்தனாரவர்பெயராம்.

வசனம்.

இவ்விதமாய்க்கடையரிருப்பின்வரப்பினில்வாழ்வார்இப்பரிவுட
ன்சிவன்கழற்கேவிளைத்தவுணர்வோடுமெந்தராபதிநாற்புலமையாண்
டதொழிலனுமயத்திலொப்பியநந்தனாரொருவருண்டாயிருக்கும்புலை
ப்பாடியில்பரமசிவபாதாரவிந்தத்திலமிருந்த அந்தரங்கபொருந்தி
னவராகியநந்தனார்மிகபத்திபுரிந்திருந்தார்விச்சுடன் சேற்றில்விழுந்
தாலும் பிள்ளைப்பூச்சிமேல் சேறொட்டாது அத்தன்மைபோல எத்
தனைகாரியமிருக்கினும் முத்தியளிக்கும் கர்த்தனாகிய அத்தனை தன
து சுத்தமாகிய சித்தத்தில் நித்தமும்வைத்து உத்தமபுத்திபெற்றி
ருந்தார் மற்றதுமறந்தார்கற்றதுமறந்தார்உற்றதுமுணர்ந்தார்இப்ப
டியெல்லாருமிருந்தும் நல்லகுணமில்லாமற்போனால் உலகம் பொல்
லாங்கு சொல்லுமல்லவா.

சிந்து.

இவர்வெகுநல்லவராமிந்தத்தொல்லுலகில் அவரோசிவனடியார்

வசனம்.

என்று ஆச்சரியங்கொண்டுசொன்னபடியினாலேஇவரைப்போல ப்பக்திமார்க்கத்திலிருந்தவராயிருந்தவர் ஆரிருக்கிறார் ஆரிருப்பார் என்றுஇவனைச்சொல்லப்போகாதனைகடந்தபரமசிவபக்திமானென்று சொல்லப்படும்,

சிந்து.

அவர்க்காருமெதிரில்லை தாரணியில்கோடிகோடிசென்மங்களோ முன்னங்கும்தமதுசெய்தநற்றவமே அவதாரமானதுவோவீசன் அன் புபுரியும்பேரின்பசுகம்கொள்ளக்கொள்ளவேபிறந்தார் திருக்கோயில் வலஞ்சுழன்றுவருடன்செய்யும்பணிவிடைகள்.

பெரியபுராணச்செய்யுள்

விருத்தம்.

ஊரில்விடும்பறைத்துடைவையுணவுரிமையாங்கொண்டு
சார்பில்வருந்தொழில்செய்வார் தலைநின்றார்தொண்டினால்
காரிலையமுக்குடுமிப்படையண்ணல்கோயிறொறும்
பேரிகையேமுதலாயமுகக்கருவிபிறவினுக்கும்
போர்வைத்தோல்விசிவாரென்றினையனவும்புகலுமிசை
நேர்வைத்தவீணைக்கும்யாழுக்குநிலைவகையாற்
சோர்வுறுதந்திரியுந்தேவர்பிரானர்ச்சனைக்கட
கார்வத்திருடன்கோரோசனையுமிவையளித்துள்ளார்

வசனம்,

இந்தப்பிரகாரம்நந்தனார் சிவஸ்தலங்கள்தோறும்போய சுவாமி யைத்தோத்திரஞ்செய்கிறதெப்படியென்றால்,

தரு-இ-ம-காம்போதி-ஆதிதாளம்.

கண்ணிகள்.

செந்தாமரைமலர்கு
செறிந்தமலர்க
எந்தபிரானுக்கபிஷேகக்
நீந்தொழிந்தார்மன
சிவசரவணமூர்த்தி
திருவவதார

மோவைகளுமேடையும்
வாட்டச்சிறந்தவேனார்
கோரோசனைமேற்
வாட்டம்
ஞானசம்பந்தனோனத்
மாகவந்தசீர்காழி

புலனரட்சகன்றிருநிலை நாயகியையேத்திப்
பூரிபிதார்வெகு வாக
ஒருபொம்புறமுமதி ளோங்கியமர்பூரத்
துவந்தவிஸ்வனாதா நிசனைமிகத்தொழுது
ஒருமுகசருவிகததோல் ஈசமபிவைதந்தா
யீவுலகிற்புகழ்வேந்தன் பெயரை
உமையொருபாகத்தி லுயர்பரமன்றரும
னொருபசுவிங்கன் ராகமாயவேடஞ்
சமைத்துப்பின்மனுநீதிச் சோழன்றனக்குக்காட்சி
தந்தவாரூர்ச்சென்றான் டக

வ ச ன ம்.

பின்னும்நந்தனார் காமசெய்புந்தருணமேதென்றால்இவர்புலையனு னபடியால்சிவன்நலங்களுக்குப்போயவீதியைச்சுற்றி சந்நிதியிலவந் துதடிவிழுந்ததுபோலஉடல்பணியப்பணிந்துபுழுதியில்புரண்டுமயிர் சிலிர்ப்பககண்ணீருதிரவாய்குளறிஉளைதடுமாறிஒருதரமழுதுஒருமர ந்தொழுதுஎக்கலித்துக்கெக்கலித்துஒருதரஞ்சிரித்து ஒருதரம்வெருத் துசுகமடைந்துஅகமகிழ்ந்து அனல்கண்டமெழுகதுபோ லுள்ளமுருகி ஆனந்தவெள்ளம்பெருகிகள்ளவகருதிச்சிவனேயென்று வாய்வலிக்க ப்பேசிகைவலிககக்கொட்டிகால்வலிககக்கூத்தாடி நிற்பவொருமுகமா த்தஞ்சித்திரத்திலெழுதும் பதுமைபோல் கண்ணிமையால்வாயசை யாமல் அலையடித்தோய்ந்தகடல்போல நிறைந்துதன்னைமறந்திருப் பார்நன்னினைவுவந்துபரவசந்தெளிந்துஈசனைப்பணிந்துகொண்டுவந் தபணிவிடைசெலுத்தக்கோவிலார்கேட்கக்கும்பிட்டுச்சொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம-ஆனந்தபைரவி-ரூபகதாளம்.

பல்லவி.

வாரிருக்குதுதோலிருக்குது வாங்கிக்கொள்ளுவீரோமத்தளங்கள்
பேரிகைக்கும்வீணைக்கும்நல்ல விருக்கிகட்டுமவிச்சை வாரி

பேரிருக்குதுபோதுஞ்சிவம் பெருமையைக்கொண்டாடிதினஞ்
சிற்றைகின்றதில்லைப்பதியில்சேருதற்குபாயந்தேட வாரி

சிறியவனுன்சாதியொன்று மறியாதவனானேமை
சிவபெருமானுக்கடியேன் செய்யும்பணிவிடையிது வாரி

சி ந் து

செய்யும்பணிவிடைகள்-ஈசன்-சித்தைமகிழ்ந்துகுளிர்ந்திடவே
மத்தளபேரிகைக்கும் - இசை - வார்கொடுத்தும் புறந்தோல் கொடு

த்துமறவாமேலேதினமும் நல்லவாசம்பொருந்தும் கோரோசனையும் தேவாலயங்கள்தோறும்தந்து சித்தமுருகிபத்திவெள்ளம் பொங்கோடிக்கங்குக்கரை யென்றுபேதமறியவொண்ணாது கண்டீர் சாதியில்நீசனவா.

வசனம்

இப்படி பக்திசெய்யாநின்ற நந்தனாருடையவரலாறேதென்றால்

கீர்த்தனம்-துக்கடா-ஆதிதாளம்

ஆதனூரிலொருவேதியர்க்குள்ளே அடிமைக்காரபபறையன்
ஞானவாதுமொன்றுந்தெரியாதவன் பரிசுத்தமானபத்தன்
கோதிலாதவங்கள்சாதியர்க்குச் சிவகணங்களைமிகச்சொல்லி
காதலோடுதிருப்புன்கூரீசனைக் கண்டுவருவோமென்றார்

வசனம்.

நந்தனார் சிவதரிசனஞ்செய்யவேண்டியதற்காக தங்கள்
சாதியாரைக்கூப்பிடுகிறார்

கீர்த்தனம்-இ ம்-செஞ்சுருட்டி-ரூபகதாளம்

பல்லவி

சிவலோகநாதனைக்கண்டு சேவித்திடுவோம்வாரீர்,

அநுபல்லவி

பவபயங்களைப்போக்கி அவர்
பரமபதத்தைக்கொடுப்பாரந்த சிவ

சரணங்கள்

அற்பசுகத்தைநினைத்தோம் அரன் திருவடிமறந்தோம்
கற்பிதமானபிரபஞ்சமிது கானல்சலம்போலேயெண்ணி சிவ

ஆசைக்கடலில்விழுந்தோ மினியறிவுக்கறிவையிழந்தோம்
பாசமகலவழிதேடாமல் பரதவிக்கும்பாவிபாழும் சிவ

மானிடசென்மங்கொடுத்தே ர் தன்னைவருந்தக்கரைகனித்தார்
தேனும்பாலுமபோலேசென்று தோடியில்நின்றுக்கொண்டு சிவ

பெரியபுராணச்செய்யுள்-விருத்தம்.

திருப்புன்கூரச்சிவலோகன் சேவடிகண்மிக்நினைந்து
விருப்பினொடுந்தம்பணிகள் வேண்டுவன்செய்வதற்கே
அருத்தினொருப்பட்டங்காதனூர்தனினின்றும்
வருத்தமுறுங்காதலினால் வந்தவ்வூர்மருங்கணைந்தார்

வசனம்.

நந்தனாரிபபடிச் சிவலோகநாதனைச் சேவிப்போமென்று சொன்னாய்ச்சொல்லி நிச்சயஞ்செய்த் நந்தனாருக்கும் பறையர்களுக் குண்டானவாக்குவாதம்

அவர்கள்-தனஞ்செய்யுஞ்சடங்கிதுவல்லவோ பறையர்கள்செய்தால் பழ
வயேயென்றார்

நந்தன்-தேருந்திருநாளுமிருக்குதுபோவோம் வாரும்வாருமென்று வரு
ந்தியுமழைக்தார்

அவர்கள்-பொறுமயிது புண்ணியமல்ல எரிபோவோமென்று பதிவ
ளையுமழைததார் சேரியைநீங்கிச சிலதுபேர்வந்தா

பதினொருபேர்அன்புடன்வந்தார் நந்தன்மாடுபோல் ஞானமார்க்கம்
பொழிந்துதவமுனிபோலே தானங்கேநின்றார்

அவர்கள்-சிவலோகநாதனைச் சேவிப்போமென்றார் நந்தன்வெறுங்கை
யோடேபோகலாகாதென்று

வாருடன்தோலும்விலைசயாய்க்கொண்டார் அவர்கள்சேரியிலுள்ள சிறி
துவெளைறார்

நந்தன்-வந்தபுலையருக்குப் பந்திபொருகவே செத்தியில்நிறுத்திட்டார் அவர்
சதழியந்தானென்று மெத்தவுங்கும்பிட்டார்

கிர்த்தனம்-இ-ம்-வராளி-சாப்புதாளம்

இவர்-சிங்காரமானபள்ளுபாடினார்
அவர்-அங்கங்குளிர்ந்துகொண்டாடினார்
இவர்-கோரோசனப்பையையெடுததார்
அவர்-தாராளமாய்வாரிக்கொடுத்தார்
இவர்-சிவாந்திரஞ்சொல்லிச்செபித்தார்
அவர்-தவமிதேயென்றுச்சரித்தார்
இவர் ஆசைப்பெருங்கடல் தாண்டினார்
அவர்-ஓசைப்படாமலேவேண்டினார்
இவர்-அளவில்லாவானந்தமடைந்தார்
அவர்.அளவில்லாககாட்சி பெற்றிருந்தார்
இவர்-திருப்புன்கூரீசனைப்பாடினார்
அவர்-விருப்பமோடிவனைக்கொண்டாடினார்

வசனம்

இப்படி எல்லோருங்கூடிச் சிவனை அடிக்கடிவணங்கி அரகராவெ
ன்றுரைத்திடுஞ் சத்தம்பரமனே பறிவார் இப்படிநந்தனார் பதினொருபே
ர்பறையரோடு திருப்புன்கூர்வந்துசேர்ந்தார்

கலம்வந்துவிதிவலம்வந்துகண்கள்
சலமவந்துகோரும் பலம்வந்துதெங்கள்

குலஞ்சுத்தமாச்சு மலமெல்லாம்பாசந
நலங்கொண்டோமென்று நிலங்கொண்டுநின்றார்

வசனம்

அந்தஸ்தலத்திலே நந்தி மிகவும்பெரிதானபடியினாலே லிங்கதரிச
னஞ்செய்ய நந்திமறைந்திருப்பதால் நந்தனார் துயரமடைந்து சொல்
லுகிறா

தரு இ-ம்-சங்கராபரணம்-ஏகதாளம்

கண்ணிகள்.

அரகரதிரிபுராந்தசிவகாவெங்கள்
அம்பிகையொரு பாகா-சங்கரும்
சிந்தரமாயென்றனைப்போல விருந்து
வினையனாககருள போகா
வெள்விடைமேல்வரும் விமல நமசிவாய
விளங்கும்வேத முடிவே நால்வர்க்குத்
தென்றுநசிவஞானபோதமளிக்க வந்த
செந்தமெய்த்தவ வடிவே
வாலும்மழுவும்மரகதவாகுவலயமும்
மல்குல்குல பாணி எனி
யேனுங்காணத்தரிசனைதாவுமை யுட
னெழுந்தருளவிரிங்கு தோணி
மன்னுஞ்சந்நிதிமூனம் மருவுமிடப தேவா
மறைதிருக்கவினைக காணேனே முன்னம்
என்னவினைசெய்தேனோ கனவெற்ற பாவந்தானோ
இதயத்தில்மகிழ்ச்சி பூணேனே

சவாமி

சிவலோகநாதன் திருச்சந்நிதானம்
மலையாகியநந்தி மறைத்திடுகிங்கே
பலகாலஞ்செய்த பாழ்வினைதவிர்ந்து
மலையாகியிப்படி மறைத்ததோவென்றார்

வசனம்

என்றுசொல்லிய நந்தனார் பின்னுஞ்சொல்லுகிறார்

கீர்த்தனம்-இ-ம்-தேசிகதோடி-ஆதிதாளம்

வழிமறைத் திருக்குதே மலைபோலே யொரு
மாடுபடுத்திருக்குதே

பாவிப்பறையனிந்த வூரில்வந்துபிறந்த பாவந்திரேனே-உந்தன்
பாதத்திலசேரேனோ வரேனோ சிவலோகநாதா வழி

கோடியில்நின்றுதெரிசித்தாலும்போதும கோயில் வரமாட்டானே
ஐயேஓரடிவிலகினால்போதுமங்கேநின்று உற்றுப்பார்க்கச்சநதே விலகாமல் வழி

வசனம்

இப்படி நந்தனார் தரிசனங்காணமுடியாமல் அலட்டும்போது சுவாமி நந்தனார்மீதிரங்கி நந்தியைவிலக்கசொன்னார்.

பெரியபுராணச்செய்யுள்

சீரேறுமிசைபாடி திருத்தொண்டர் திருவாயி
னேரோதமயிடவேண்டுமெனநினைந்தார் நந்துநேர்வார்
காரேறுமெய்ப்புன்கூர் கண்ணுதலார் திருமுன்பு
போரேறமறைவிலக்கவருட் புரிந்தருளிப்பணித்தார்

கீர்த்தனை-இ-ம்-அக்கடா-ரூபகதாளம்

ஒருநாளும்வாரதபக்தன் திருநாளைப்போவானென்னுஞ்சித்தன்
உலகெதும் பிரசித்தங்கண்டு ஓதுங்காமலிருந்ததுகுற்றம்

கீர்த்தனம்-இ ம்-அங்குசதோணி-ரூபகதாளம்

பல்லவி

சற்றேவிலகியிரும்பிள்ளாய் சந்நிதானமறைக்குதாம்-நீ சற்

அநுபல்லவி

நற்றவம்புரியும் நம்மிட திருநாளைப்போவார் வந்திருக்கிறார் சற்

சரணங்கள்

சாதிமுறைமைபேசுறான் தன்னையிகழுந்துயேசுறான்
கோதிலாதகுணமுடையோன்கோபங்கொண்டால்தாளமாட்டோம்- சற்

வேதகுலத்தைப்போற்றுறான் விருப்பிவிருப்பியேற்றுறான்
பூதலத்திலிவனைப்போலே புண்ணியபுருஷனொருவனில்லை சற்

பத்திவில்லைகண்டவன் பார்த்துபார்த்துவுண்டவன்
சித்தங்குறையில்லமதுசெல்வமுறையுங்குறையுந்தயவுசெய்து சற்

வசனம்

இப்படி சுவாமிசொல்ல நந்திவிலகினார்.

அக்கடா

நந்திதூரவிலகிநின்றார தன்சாமிமனதைக்கண்டார்
இவன்நல்லபத்தனென்றார் அடங்காதவெட்கங்கொண்டார்

கீர்த்தனம்-இ-ம் சாவேரி-ரூபகதாளம்,

பல்லவி.

மற்றதெல்லாம்பொறுப்பேன்
முத்திராலுங்கொடுப்பேன் மற்ற

பத்தனுகளுக்குற்றஞ்செய்தா
லதைப்பொறுக்கமாட்டேன் மற்ற

திடுக்கென்றவனைத்துடிக்கப்பேசி
அடிக்கப்பொறுக்கமாட்டேன் மற்ற

பசிக்குதென்றுவருகையிலொருவன்
பொசிக்கப்பொறுக்கமாட்டேனை மற்ற

வசனம்

இப்படியேசுவாமிசொல்லும்போது நந்திமனதாகலங்கினுாவிலகி நின்றார் நந்தன் சிந்தைகுளிர்ந்து அளவில்லாதஆனந்தமடைந்து குதித்தார் கெக்கலித்தார் கொண்டாடினார் துதித்தார் திருவடியுபாசேபதித்தார் எங்கும்சிவமாகப்பாவித்தார்

கடுக்கா

குதித்தார்எக்களித்தார் உள்ளங்களித்தார்
பலருபடித்தார் கண்ணீர்வடித்தார் பற்களைக்கடித்தார்
ஒருகாந்துடித்தார் இருதரம்நடித்தார்
இப்படிதரிசனஞ்செய்தார நந்தனார்தரிசனஞ்செய்தாரோ

தக்கடா ஆதிதாளம்

சட்ட மாகச்சந்நிதானங்கண்டுதுடை தட்டினாகைகொட்டினார்
அஷ்டமூர்த்தியெவருக்குமென்று கூத்தாடினார்பண்பாடினார்
கஷ்டமானசமுசாரசாகரந் தாண்டினார்மெய்வேண்டினார்
இஷ்டதெய்வசிவலோகநாதனை எண்ணியாருளாநண்ணினார்
மட்டிலாதசந்தோஷங்கொண்டுதான் பட்டபாடுகளைப்பேசினார்
சென்மங்கெட்டதென்று தன்னையேசினார்
இஷ்டமானதென்சொனங்களோடும்வா கட்டிமுத்தமிட்டுலாவினார்
சிங்கக்குட்டிபோலவே தாவினார்

கீர்த்தனம்-இ-ம்-கலியாணி-அடதாளம்

பல்லவி.

தெரிசனஞ்செய்தாரோ-நந்தனார்- தெரிசனஞ்செய்தாரோ

அநுபல்லவி,

தெரிசனஞ்செய்தார் தேன்மழைசொரிந்து
உவகையுடன் அவர்வாழிவாழியென்று தெரி

திருச்சிற்றம்பலமென்று சொல்லத்தலைப்பட்டார் சேரியிலுள்ள பெரியோர்களைக் கூப்பிட்டார் வணங்கிக்கும்பிட்டுச் சொல்லுவார்

கீர்த்தனம்-இ-ம்-பியாகு-ஆதிதாளம்

பல்லவி

சிதம்பரம்போவேன்-தேறித்தெளிவேன்

அநுபல்லவி

சிதம்பரம்போவேன் தேறித்தெளிவேன்
பதங்களைப்பாடிப்பார்புகழ்தில்லைச் சிதம்பரம்

சரணங்கள்

ஒருதரஞ்சொன்னா லுலகங்களுய்ய
மிருவினைப் பயனில்லை யென்றாளுந்தில்லைச் சிதம்பரம்

பாகிரதத்திரியில் பன்மறையோதி
வேதியர்போற்றி விளங்கியதில்லைச் சிதம்பரம்

திறமொன்றறியாத் தீங்குகள்செய்யும்
பறையனாய்ப்பிறந்த பாவங்கள் துலையச் சிதம்பரம்

வசனம்

நாளைப்போவார் தனக்குத் தெரிசனங் கிடைக்கவேண்டியதற்காகப் பிள்ளையாரைவேண்டுதல்

விருத்தம்

காலையுடன்பூமிப ச்சாய்ந்திடுவான் செங்கமலக்காலைத்தூக்கி
கோலமிட நமிர்ந் திருமனதுள்நாயகனேகுற்றந்தீரப்
பாவிக்கும்படியெனக் கின்னருள்புரிவாயென் றுநறைபழங்கள்வைத்து
மேலைக்கோபுரவாசல் பிறைகதனைச்சிந்தையுள்ளே வேண்டுவாரே

வசனம்

நந்தனார் சேரியிலுள்ளபுலையர்களை அழைத்துக்கொண்டு சிதம்பரம்போய் தரிசனம் பண்ணவேணுமென்று ஆசையுற்று பதிமார்க்கங்களைச் சொல்லலுற்றார்

கீர்த்தனம்-இ-ம்-மாஞ்சை-ரூபகதாளம்.

நாளைப்போகாமலிருப் பேனோ-இந்த
நற்றநரமபுலின்னஞ்சுமப் பேனோ-நான்
நாளைப்போகாமலிருப் பேனோ-இந்த
நாறுமூடலைக்கண்டிகளிப் பேனோ-நான்
நாளைப்போகாமலிருப் பேனோ-இந்த
நாளைவிஞைக்கழிப் பேனோ-நான்

காலைப்போகாமலிருப் பேனோ அந்த
சமனார்க்குஞ்சியோடியொளிப் பேனோ நான்
காலைப்போகாமலிருப் பேனோ சிவ
ஞானத்தைப்பாராமலிருப் பேனோ நான்
காலைப்போகாமலிருப் பேனோ இந்த
காட்டிலிகழ்ந்தென்மம்படைப் பேனோ நான்
காலைப்போகாமலிருப் பேனோ தில்லை
நாதனைக்காணாமல்போசிப் பேனோ நான்

ஆனந்தக்களிப்பு.

காணாமலிருக்கலாகாது பாழும்
கட்டைகடைத்தேறவேண்டியிருந்தால் காணு
முத்தியளித்திடும் பாதம் தில்லை
மூவாயிரம்பேர்கள்பூசிக்கும் பாதம
சத்திக்கிணையான பாதம் வேத
சாஸ்திரங்கள்நாலுந்தேடிய பாதம் காணு
காலனைச்சீறிய பாதம் ஜன
காதிகளுக்குள்ளேசெலுத்திய பாதம்
மாலயன்தேடிய பாதம் எங்கள்
மாணிக்கவாசகர்பீடிகை பாதம் காணு
ஆசையைப்போக்கிய பாதம்பர
மானந்தவெள்ளத்திலாடிய பாதம்
வாசம்பொருந்திய பாதம தில்லை
மாகாளிதாழவேதூக்கிய பாதம் காணு
பாலகிருஷ்ணன் தொழும் பாதம்காட்டில்
பாம்புபுலிக்குக்கூத்தாடிய பாதம்
கோலச்சிலம்பணி பாதம்
கோவிந்தராஜர்தெரிசிக்கும் பாதம் காணு

வசனம்.

நந்தனார் சிவனைக்காணாமல்காலம்வீணாகப் போகலாகாதென்று கூப்பிடுவார்,

கீர்த்தனம்-இ-ம்-காதகாமக்கிரியை-ஆதிதாளம்,

எல்லோரும் வாருங்கள்
சுகமிருக்குது பாருங்கள் எல்லோரும்

நல்லோர்பணிந்திடும்தில்லையம்பல
நாதன்பாதம்பணிந்துகொள்வோம் எல்லோரும்

கண்ணிகள்,

வாருங்கள் பரமானந்தமிருக்குது பாருங்கள்

சடலமெடுத்தபின்னே துமேசண்டிலீர்
விடமெடுத்துண்டமேனியன்றேர்வர
வடம்பிடித்திடவாருங்கள்தில்லையில்
இடம்பிடித்துநாமெல்லோரும்வாழலாம் வாருங்

சொல்லடாதில்லைச்சிற்றம்பலமென்று
மெல்லடாவாயைசந்நிதிநேரவே
நில்லடாயிந்தமாயப்பிறவியைக்
கொல்லடாசிவலோகங்குடிபுக வாருங்

தள்ளடாகமதில்லறவாழ்க்கையைத்
தள்ளடாநந்தனார் சொல்லுறுதியென்று
கொள்ளடா தில்லையம்பலத்தாண்டவன்
பள்ளடாவென்றுபாடிக்கூத்தாடியே வாருங்

வசனம்.

இப்படிவாருங்களென்றழைக்க புலையர்வாராமலிருக்கநந்தனார்நல்லவர்வார்த்தையைசொல்லிப் பறையரை சிவநாமத்தைச் சொல்லச் சொன்னார்,

இருச்சொல்லலங்கார வாக்குவாதம்.

நந்தனார்தில்லையம்பலமென்றுசொல்லச்சொன்னார்
புலையர்கள்ளப்பேச்சென்றுசொல்லச்சொன்னார்
நந்தனார்சங்கராவென்றுசொல்லச்சொன்னார்
புலையர்இங்கேவாவென்றுநில்லென்றார்
நந்தனார்சற்றேயாகிலும்சிவனைத்தியானம்பண்ணென்றார்
புலையர்சத்தையோடுபாலைபானம்பண்ணென்றார்
நந்தனார்திருச்சிற்றம்பலமென்றுபிலக்கச்சொன்னார்
புலையர்வெறுச்சகம்பளமென்றுபிலக்கச்சொன்னார்
நந்தனார்சேரியில்நல்லகாரியமிதென்றார்
புலையர்ஏரியில்நல்லமாரியிதென்றார்
நந்தனார்விட்டநாள்நினையாமலெட்டுநாள்மறவாமல்

நிஷ்டைபண்ணாதசென்மம் கஷ்டமென்றார்
புலையர் விட்டவிரைமுளையாமல் நட்டபயிர்பலியாமல்
கெட்டுதானால் கிராமம்கஷ்டமென்றார்.
நந்தனார் உங்கள்புலைத்தன்மைபோருமென்றார்
புலையர் எங்களைக்கெடுத்தாயேபாவியென்றார்
நந்தனார் தேவாதிதேவனைதெரிசிப்பீரென்றார்
புலையர் பாவாடராயனைப்பாவிப்பீரென்றார்
நந்தனார் அனைத்தாருமீசனுக்கன்புசெய்யென்றார்
புலையர் இனத்தாரைநொந்தவர்க்கின்பமேதென்றார்
நந்தனார் தினமுஞ்சிவனைப்போற்றிக்களிப்போமென்றார்
புலையர் பதரைத்தூற்றிநெல்லளப்போமென்றார்
நந்தனார் பெண்ணாசைமண்ணாசைவிடுதலேலன்றும்
புலையர் எந்நாளுமுன்னாலேகெடுதலையுண்டாம்
நந்தனார் அப்பரோடுஇஷ்டமுடனானிருப்பேன்தடையேது
புலையர் சப்பலோட்டிப்பட்டகடன்கொட்டைநூற்றால்தீராது
நந்தனார் பூசத்திருநாளில்போய்வருவோமென்றார்
புலையர் பேசத்தெரியாதுபேயாநீபோவென்றார்
நந்தனார் அழுதுமுறையிட்டாலம்பலத்தேகேட்குமென்றார்
புலையர் உழுதுபயிரிட்டாலுள்ளபடிவிளையுமென்றார்
நந்தனார் சித்தமெல்லாமம்பலத்தேசென்றதென்றார்
புலையர் புத்தியெல்லாம்வேறுபட்டுப்போச்சுதென்றார்
நந்தனார் குற்றாலத்தீசனைக்கூறுவீரென்றார்
புலையர் கைத்தாளம்போட்டுக்கதறுவீரென்றார்
நந்தனார் தாண்டவத்தெய்வமேதகுந்தெய்வமென்றார்
புலையர் தூண்டிவீரப்பனேதொழுந்தெய்வமென்றார்
நந்தனார் இஷ்டப்படிநடக்குமீசனைத்துதியென்றார்
புலையர் கஷ்டப்படமாட்டோம்கசக்காதேபோவென்றார்
நந்தனார் கொண்டாடிதெய்வத்தைகொள்ளுவீரென்றார்
புலையர் பெண்டாட்டிதெய்வமேபெருந்தெய்வமென்றார்
நந்தனார் நலத்தைக்கொடுக்கவந்தநற்குருவென்றார்
புலையர் குலத்தைக்கெடுக்கவந்தகோடாலிக்காம்பென்றார்
நந்தனார் பலவழக்கம்நானதுவென்பறையாவென்றார்
புலையர் குலவழக்கமறியாதகுருடாவென்றார்
நந்தனார் நாக்கறுப்பேன்சிவனைநவிலுவீரென்றார்
புலையர் மூக்கறுப்பான்கதைமொழிந்தீரோவென்றார்

வசனம்.

நந்தனார் பெரியோருடைய அனுஷ்டானத்தைப் புலையர்களுக் குச் சொல்லுகிறார்,

வேறு.

நந்தனார் சிவனேதெய்வம் சிதம்பரமேகயிலாயம்
தவமேபெருமைதான்சம்பிரதாயம்
புலையர் சேரியேசொர்க்க ஏரியேகைலாயம்
மாரியேதெய்வம் மதசம்பிரதாயம்
நந்தனார் படிப்பதுஞாயம்பார்ப்பதுமூலம்
குடிப்பதுமறிப்பால் குலசம்பிரதாயம்
புலையர் பிடிப்பதுநண்டு பொசிப்பதுஇறைச்சி
குடிப்பதுகள்ளு குலசம்பிரதாயம்
நந்தனார் பாழைக்கடப்பா பரவெளிதாண்டி
கோழையறுப்பார் குலசம்பிரதாயம்
புலையர் ஆறத்தில்குளிப்போம் அருங்கோடைவந்தால்
கூழைக்குடிப்போம் குலசம்பிரதாயம்
நந்தனார் ஆசையைப்போக்கி ஐம்புலனைச்சுட்டு
மாசற்றவாழ்வு மதசம்பிரதாயம்
புலையர் பூசைகள்புரிவோம் பொன்னேருழுவோம்
கூசாமல்வாழ்வோம் குலசம்பிரதாயம்
நந்தனார் மையத்திலாடிமனக்கயிறுபூட்டி
வையத்திலிருப்பார் மதசம்பிரதாயம்
புலையர் கையிலேசலையம் காலிலேசேறு
பையிலேபாக்குபறசம்பிரதாயம்

வசனம்.

சிவபக்திபண்ணினல் அணிமாதிகள் அடையலாமென்று நந்த னார் சொல்லுவார்

கீர்த்தனம்-இ-ம்- நீலாம்புரி-ஜம்பைதாளம்.

அஷ்டமாசித்திகளைப்பெறலாந்தில்லையி
லானந்தத்தாண்டவன்கோயிலைக்கண்டு
இஷ்டமுடன்வீதிவலம்வந்துநாசன்
இணையடிதொழுதாற்கு இனிப்பிறப்பில்லை
வாருங்கள்வாருங்கள் சொன்னேனென்றீங்கள்
வாயாடாதோடிவருவீரெனமுன்னே

கருமணிபிச்சோலைபோதுமுந்தன்
கள்ளவேஷமெங்களுக்குள்ளேயிடையாது
பருகுவதுசூழ்க்கஞ்சிபோதும்வாய்
பதறிவார்த்தைகள்பேசிப்பசப்பாதேபோடா

வசனம்,

நீசொன்னபடிகேட்பதில்லைஎங்கள்நிச்சயமறியாமல் பேசாதே நீசொன்னபடியேகேட்பதில்லை.

ஏசல்.

புலையர் பாப்பாரதெய்வமது பலிக்காதுபறையரைக்
காப்பாற்றமாட்டாது கைவிடுவீரென்றார்
நந்தனார் பாப்பாரத்தெருவென்றுபார்க்குபரிதிபோல்
காப்பாற்றுமல்லவோ கண்ணுதலேயென்றார்
புலையர் அடுக்காதவார்த்தையை அல்லும்பகலோதியே
பிடிக்கிறீர்பிடிவாதம் போதுமேயென்றார்
நந்தனார் கடுக்காயைத்தின்பரோ கன்னலதுபோல்லவே
கொடுக்காததானாலும் கொள்வீரென்றார்
புலையர் பித்தனென்றுசொல்வார் பேருலகிலெல்லோருஞ்
சத்தியமிதல்லவோ தள்ளுவீரென்றார்
நந்தனார் பித்தனாயிருந்தாலும் பிறவியறுத்தவர்க்கும்
முத்திகொடுக்குமல்ல மூர்த்தியவரென்றார்
புலையர் இத்தனைநாளுமிங்கே யில்லாதவார்த்தையைக்
கத்துகிறீரிதுவென்ன காரியமோவென்றார்
நந்தனார் இத்தனைநாள்சென்று சனடித்தாமரையைப்
பத்திசெய்யின்மனந்தேறும் பாக்கியமீதென்றார்

அகவல்.

பாக்கியமீதென்றுபரமசிவபக்தி
மார்க்கங்களெல்லாம்வரிசையாய்த்திரட்டி
எடுத்துரைசெய்வார்ஞானமாஞ்சாதி
பிடித்தறியாமல்புலமபுவாரன்றே

விருத்தம்.

வக்கணைக்காரர்வந்தார் வாய்ப்படப்பேசவேண்டாம்
சக்கரைப்போலேபேசிச் சாதித்ததுக்கண்டாயன்றே

பக்குவகாலம்வந்தால் பரமனார்திருநாமந்தான்
சக்கரைப்போலேதோன்றுஞ் சாதிப்பார்முத்திதானே

வசனம்,

புலையர்களனேகரானபடியால் பலவிதபலர்சொல்லுகிறார்-

ஏசல்-கீர்த்தனம்-இ-ம-புன்னாகவராளி-ரூபகதாளம்.

புலையர் ஆண்டிப்பரதேசிபாகராவென்றவர்
வேண்டுதெய்வமறுவிளங்காது வென்றார்

நந்தனார் மூன்றுலகுக்கிறை முன்னின்றுகைகூப்பி
ஆண்டவனேயென்று அர்ச்சிக்கு மென்றார்

வேறொருபுலையர் நாத்தைப்பிடுங்கியே நடவுநட்டாலிந்த
சோற்றுக்கவலைவிடுஞ்சுகமிது வென்றார்

நந்தனார் கூத்துவனார்வந்து கூப்பிடும்வேளையில்
மாத்திரைப்பொழுதில்லை மன்னுயி ரென்றார்

வேறொருபுலையர் மானாருமக்களும் வாழ்கின்றவிடத்திலே
யானாகிலுமுங்களுக்கழுகையோ வென்றார்

வேறொருபுலையர் மூக்குநுனியைப்பார்த்துமுணங்கியேஎந்நேரம்
காக்கைபோலவேசும்மாக் கதறுகிறீ ரென்றார்

நந்தனார் வாக்கிலேசிவநாமம் வாராதபாவிகள்
நாக்கிலேஊசியைநாட்டுவே னென்றார்

வேறொருபுலையர் மடைவாயின்பறவைபோல்மதியாமலிருக்கிறீர்
துடைகாலிநீயென்று சொல்லுவோ மென்றார்

நந்தனார் விடையறுமீசனை வெட்டவெளியிலுன்னி
அடையாளங்காணாத ஆடுக ளென்றார்

வேறொருபுலையர் மறைபோதத்தெரியாத மடையராய்ப்பூமியில்
குறையாதபுலைத்தன்மைகொண்டோமே யென்றார்

நந்தனார் பறையனாய்ப்பிறந்தாலும் பரகதிதேடலாம்
உறுதிமாத்திரம்வேண்டும் உமக்குண்டோ வென்றார்

வேறொருபுலையர் தலைசுற்றியாடுதுதங்கச்சிகொழுந்தியார்
அலகையேநானென்றறிகிலே னென்றார்

நந்தனார் கலம்புரியுந்தில்லை நாதாவென்றுநிற்றைத்
திலகம்போலேயிட்டும்தெண்டனிடு ரென்றார்

வேறொருபுலையர் உலகத்திலொவ்வாத உருவேற்றிச்சேரியைக்
கலகமிட்டீர்பலன்கண்டீரோ வென்றார்
நந்தனார் பலகாலுஞ்சொன்னால் பசியாதுபாழ்வினை
விலக்காமலிருக்குதுவேடிக்கை யென்றார்
வேறொருபுலையர் திருப்புன்கூரீசனைச்சேவிக்கலாமென்று
விருப்பமுடனழைத்தவித்தைகா ணென்றார்
நந்தனார் கரும்புதின்னக்கூலிகையில்கொடுப்பதுண்டோ
இரும்புமனதுகாராயில்லையே யென்றார்
வேறொருபுலையர் புத்தியில்லாதவன்புலம்புரான்சிவனென்று
கத்தினாலுமென்னகாரியமோ வென்றார்
நந்தனார் நித்தமுமொருதரம்நினைவுடனேசிவன்
சத்தமிருந்தாலொன்றுந்தாழ்வில்லை யென்றார்
வேறொருபுலையர் சேரியிலிருந்தாலும்செல்வங்குறைந்திடும்
ஊரைவிட்டாலும்நீரொதுங்குவீ ரென்றார்
நந்தனார் வாருங்களெல்லாரும்மன்னனைப்போலவே
சேருவோர்இல்லைச்சிதம்பர மென்றார்
வேறொருபுலையர் பாலாறுபெருகவேபண்ணையைப்பயிரிட்டு
ஆளாமலேவிறுக்கலையுரி • யென்றார்
நந்தனார் பாலகிருஷ்ணன்தொழும்பாதத்தைநான்கண்டு
நாலாம்பதவியைநாடுவே னென்றார்

வசனம்.

அவர்களில் ஒருபுலையர் உரைத்தது: எப்போதுஞ் சிவனைக்கொண்டாடினால் நம்முடைய தொழிலுக்குக் கெடுதலுண்டுபண்ணை விளையாதென்று சொல்ல நந்தனார்கேட்டுச் சொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-தண்டகம்-ஆதிதாளம்.

அரகராவென்றொருதரஞ்சொன்னாலேங்கலமே விளையும்
பாவர்தங்காமற் றுலையும்
சிவசிவாவென்றொருதரஞ்சொன்னால்சென்மசாபல்லிய மாச்சே
பண்ணியகருமமதுவே யாச்சு
தில்லையம்பலத்தெரிசனங்கண்டால் தேவருமவந்தாரோ
அந்தமூவரும்பொருந் தாரோ
அடிமைக்காரத்தொழில்செய்வதுதுன்பமரநாளும் போச்சே
சென்மம்போனாலும் போச்சே

வசனம்.

நந்தனார் புலையர்களைப்பார்த்து அனேகஞ்சொல்லி நாளைப்போ வேனென்று சொல்ல

சிந்து.

நாளைப்போவேனென்றுராம் அங்கேநாடும் பறையர்களோடிவ ந்து அண்ணே நீபோகாதே நமக்காண்டைபொல்லாதவன் வேண்டிக் கொள்ளான் பாப்பாரசாதியுண்டே,

வசனம்.

இப்படிச்சொல்ல புலையரைப்பார்த்து நந்தனார் சொல்லுகிறார்.

கீர்த்தனம்-இ-ம்-செஞ்சுருட்டி-ரூபகதாளம்.

பல்லவி,

ஆண்டைக்கடிமைக்காரனல்லவே யான்
ஆண்டைக்கடிமைக்காரனல்லவே

அநுபல்லவி,

மூன்றுலோகமும்படைத்தளித்திடு
மாண்டவர்கொத்தடிமைக்காரன் ஆண்

சரணங்கள்,

ஆசைக்கயிற்றிலாடிவரும்பசு
பாசமறுத்தவர்க்கடிமைக்காரன் ஆண்

தில்லைவெளிகலந்தெல்லைகண்டேறி
தேறித்தெளிபவர்க்கடிமைக்கடிமைக்காரன் ஆண்

சீதப்பிறையணிந்தம்பலத்தாடிய
பாதம்பணிபவர்க்கடிமைக்காரன் ஆண்

வசனம்.

தன்னையடிமையாகக்கொண்டவேதியர்சொற்கேளாதவரல்ல அ ப்படியிருந்தும் பத்திபண்ணவேணுமென்று பக்திநெறியைச்சொல் லிக்காட்டினார்.

விருத்தம்,

தவப்பெறுமுனிவர்மெய்க்குஞ்சரித்திரங்கொண்டநந்தன்
பவமயக்கறுக்கவேண்டிப்பகர்ந்திடுஞ்சிவவாக்யத்தை
அவகுணங்கொண்டபேயரறிந்திடப்போமோவெல்லாஞ்
சிவன்செயலாகுமம்மாய்செய்வதொன்றில்லையென்றார்

திருநாளைப்போவார்அனேகவிதஞ்சொல்லப் புலையர்கேளாமலி ருந்ததினால்சிவன்செயலென்று நாளைப்போவார் சும்மாயிருந்தார்அந் தச்சேரியில்புலையர்கூட்டங்கூடி மூத்தோரால் நந்தனாருக்குப் பத்தி சொல்வோமென்றெண்ணி அந்தச்சேரியிலே வெகுநாளாயிருக்கின்ற ஒருபுலையன்வயதுமிகுந்து உடல்தளர்ந்து பல்லுகளுதிர்ந்து தோலு கள்சுருங்கிநரம்புதெரிந்து முதுகுசரிந்து முழுதும்வளைந்து அங்கம் சொரிபடர்ந்துதினவுமிகுந்துஅதனைச்சொரிந்துசெந்நீர்வடிந்துஅவ் வுடல்நடுங்கி இவ்விதமிருக்கும் பெரியகிழவனானை யனுக்கோலூன்றி கூனிகுறுகிகோணலாய்நடந்துவந்துஅவன் நந்தனாரைப்பார்த்துகட் டியணைந்துதலைநிமிர்ந்து கண்ணீர்சொரிந்து மார்பில்வழிந்து மனங் கனிந்துகாதல்மிகுந்துஒன்றும் தெரியாதவனென்றுநினைத்து பரிந்து ஞாயமறிந்து சொல்லுவான்.

கீர்த்தனம்-இ-ம்-பியாகு-ஆதிதாளம்.

பல்லவி.

ஞாயந்தானோநீர்சொல்லும் ஓய் நந்தனாரே
நம்மசாதிக்கடுக்குமோ ஞாயந்

சரணங்கள்.

சேரியிலில்லா வழக்கம் நீர்
செய்துக்கொண்டுவந்த பழக்கம் இந்த
ஊரிலெங்குமது முழக்கம் வெகு
உறுதியாச்சுது ஒழுக்கம் இதுஞா
சிதம்பரமென்கிற பேச்சு நாங்கள்
செய்திடுங்காரியம் போச்சு அது
மதம்பிடித்ததுபோ லாச்சு இந்த
மண்டலப்பறையருக் கேச்சு இது ஞா
பறையருக்கேதுதைப் பூசம் அதைப்
பார்க்கவேயுனக்கு விஸ்வாசம் சிறு
பயல்களுக்கேயுப தேசம் நீர்
பண்ணிவைத்ததெல்லாம் மோசம் இது ஞா

வசனம்.

சேரியில்பெரியகிழவனானபடியால்சாதிவழக்கங்களெல்லாம் அ றிந்தவனாதலால் நந்தனாருக்கு இன்னமுஞ் சொல்லுகிறான்.

சிந்து.

பாப்பாரசாதியுண்டேஎன்னபாடுபடு முழுக்காடுமெங்கே நமக்கு த்திருநாளோ அந்தஞாயமுண்டோயென்னமாயமிதுவென்றேதடைட்

செய்தார் சிவன் வேடிக்கைதானென்று நாடிக்கொண்டே யறியாது போலிருந்த

பெரியகிழவன்சொல்லிய-விருத்தம்.

கழனியைத்தெய்வமெனச்சுற்றிவந்து தலைவணங்கிகரங்குவித்து
உழுதுபரம்படித்துவிரைதெளித்து முளைகொள்ளநீரோடவிட்டு
பழுதரவேகட்டதனைக்களைபிடுங்கிமடையினில்நீர்பாயவிட்டுச் (னே
செழித்திடவேபொங்கலிட்டுக்காத்தவராயனைவேண்டுஞ்செய்கைதா

கீர்த்தனம்-இ-ம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

சுவாமிதெரிசனநமக்குண்டோபுலைச்
சாதியன்றோவந்ததீதியறியாமல்

அநுபல்லவி.

பூமிதரிசனம்போதும் வெகு
புண்ணியமேசோறுபோடுமின்ன மொரு சுவாமி

சரணங்கள்.

நாத்துநரம்புகளைச்சுமப்பதும் உழுவதும்
நஞ்சைவயலைசுற்றி வருவதும்வளம்பெற
பார்த்திகள்கட்டுவிரை தெளிப்பதும்பறிப்பதும்
பாயுமடையைத்திறந்திடுவது மன்றியில் சுவாமி
சேரியிடையில்குடியிருப்பதும் பதருள்
சிதறைந்தூற்றுநெல்லளப்பதும் பார்ப்பதும்
வரைவளைந்துதமுக்கடிப்பதும் மதக்குட
முண்டுகளித்துநாம்உறங்குவ தன்றியில் சுவாமி
ஆண்டைமார்களிடம்பணிவிடை செய்வது
மருகில்நின்றுவாய்விடுவதும் நடுவதுந்
தாண்டிநடந்துநெடுங்கோல்பிடிப்பது மளப்பது
தவித்துச்சுடலைதினங்காப்பது மன்றியில் சுவாமி

விருத்தம்.

சாதியின்முறைமைகாட்டித் தடையறயிப்போதுமென்
வேதமாமுனிவராலும் வினவியுங்கண்டாரில்லை
பேதயாம்புலவருக்குப் பேரின்பநிஷ்டையேதென்
றுதலாலென்செய்வோ மென்றம்பலத்தஞ்சுவாரே,

வசனம்.

பெரியகிழவனைப்பார்த்து நந்தனார்சொல்லுகிறார்.

கீர்த்தனம்-இ-ம்-தண்டகம்-ஆதிதாளம்.

சிதம்பரதரிசனங்காணுவிடிலிந்தச்சென்மசாபல்ய மாமே
சென்னமரணசமுச்சாரம் பெருகவேசெய்தவினைகள் போமோ
கண்ணுங்கருத்தி நுக்கச்சிவனைக்காணுமல் காலங்கழிக்க லாமோ
காலபாசமதருகில்வாராமல்கண்டுபயந்து போமோ
இப்படியேயெப்போதுமிருப்போமென்றெண்ணியிருக்க லாமோ
இருதயமதிர்ந்திடச்செய்திடுங்கன்மங்களிகழ்ந்துபிரிந்துபோமோ
பின்னுமுன்னுமறியாத மூடர்கள்புத்திகேட்க லாமோ
புலையர்வாடியிருக்கினுமெய்திடும் புண்ணியங்கள் போமோ
பரமசிவனைக்கொண்டாடவேணுமென்றுபரிந்துபாவி பார்த்தேன்
பாவஞ்செய்தவர்க்குப்பலியாது அதில்பாடுபட்டுப் பார்த்தேன்

வசனம.

சேரிபுலையர்கள்கூட்டங்கூடி அனுப்பிவைத்தபெரியகிழவன்நந்தனுருக்குச்சொல்லக்கேட்டு ஆச்சரியப்பட்டுநந்தனுர் கிழவனைப்பார்த்துச் சொல்லுவார்,

கீர்த்தனம்-இ-ம்-தண்டகம்-ஆதிதாளம்.

| | | |
|---|---|---|
| மீசைநரைத்துபோச்சே | கிழவா | ஆசைநிறக்கலாச்சோ |
| பாசம்வருகலாச்சே | கிழவா | பாவம்விலகிப்போச்சே |
| கூனிகுறுகிப்போச்சே | கிழவா | கோபம்விலகிப்போச்சே |
| அங்கந்தளர்ந்துபோச்சே | கிழவா | அங்காரமும்போச்சே |
| சேரியைமறந்தாயே | கிழவா | சிதம்பரநினைந்தாயோ |
| மானுடசென்மமடா | கிழவா | மாண்டால்வருமோடா |
| அம்பலத்தரசனடா | கிழவா | ஆனந்தெய்வமடா |
| திருவடிபணியாயோ | கிழவா | தேடித்தெளியாயோ |

வசனம்.

நந்தனுர்இவ்விதஞ்சொல்லிசிவகாமவல்லிபாகனைநினைந்து நீரள்ளிபெரியகிழவன்முகத்திலேதடவிவாயிலேபோட்டு கட்டியணைத்துக்காதிலேசிவமந்திரமுபதேசித்தார் உபதேசமானவுடனே பெரியகிழவன்சித்தந்தெளிந்துசிமெய்நிறைந்து உம்முணர்ந்துஒருவனுயிருந்து அத்தனடியாருளிதுவென்றுபத்திமிகுந்து பரவசங்கொண்டுபேசத்தெரியாமற்பேசுவார்நான்இன்றைக்குத்தான் பெரியகிழவனுனேன்நந்தானனதுபங்கந்தீர்க்கவந்தாய்முத்திதந்தாயென்று சுற்றிவலமவந்துஅடிபணிந்துவிடைபெற்றுக்கண்டேன்களித்தேன் ஆனந்தங்கொண்டேன்குறைதீர்த்தேன் அமுர்தமுண்டேன் பசிதீர்த்தேன் பிறவிவென்றேன்வீடு நின்றேனென்று பேசிக்கொண்டு பெரியகிழவன் வருகிறுன்,

பெரியகிழவனுர் நந்தனுராலுபதேசம்பெற்றுவருகின்றுர்.

இதுகளைத்தெய்வமென்று வணங்கிக்கொண்டாட எணங்கோழி ஆடுகளுடன் மதுக்குடம்வைத்துப் பள்ளயம்போட்டு பம்பையடித் துவருந்தச் சன்னதமவரும் சொன்னேன் சேரிக்கு நல்லகாலம்பிறக் கும் சிதம்பரப்பித்துநந்தனுக்குத் தெளிந்துவிடுமென்றும் பெருக வாழ்வீரென்றும்பெரியகிழவன்சொன்னானே அப்படியே கிழவன்சொ ல்லைநம்பிக்கைகொண்டுபுலையர்களெல்லாம்பந்தலிட்டுபள்ளையம்போ ட்டுகொம்புதம்பட்டமுழக்கி முப்பூசையிட்டு வேண்டுவார்,

வருந்திக்கொண்டாடும் அகவல்,

புலையர் எல்லைப்பிடாரியே எதிராகவந்துஎங்
கொல்லைபுன்காவலாய்க்கொள்ளடி யென்றார்
நந்தனார் சொல்லிலுமடங்காது சோதிபரமானந்தத்
தில்லைநாயகனைத்தேவ ரறியாரோ
புலையர் முண்டாசுகட்டிவரும நொண்டிவீரப்பனைக்
கொண்டாடிபூசைகொள்வீ ரென்றார்
நந்தனார் அண்டங்கள்பதினாலுக் கப்பாலுமிப்பாலும்
நின்றார்க்குமுண்டாச்சுமில்லையாது வென்றார்
புலையர் கச்சையாயிவாள்வைத்த கறுப்பண்ணசாமியை
இச்சையுடன்வேண்டியென்றெய்வ மென்றார்
நந்தனார் பச்சிலைப்பிச்சியேபாதத்தில்சாற்றினால்
இச்சையானதுமீயுமென்றெய்வ மென்றார்
புலையர் நேசவுதிகோவுரும் நீணமுன்றாசவனும்
இயகன்னுடைத்துத் தெரிந்து நின்றார்
நந்தனார் வாயாலேசிவமென்று வருந்தினலெப்போதும்
தாயனைப்போலவே தழுவிவரு மென்றார்
புலையர் பித்துபிடித்திருக்கும் பேயனாம்நந்தனுக்கு
சித்தந்தெளிந்திடச் செய்திடுவீ ரென்றார்
நந்தனார் பத்திவெள்ளம்பெருகிப்பாய்ந்தாலுஞ்சேரியில்
நத்தையுறிஞ்சுஞ்சாதிநாடாது வென்றார்

வசனம,

இவ்வகையாகப் பூசைபோட்டுத் தெய்வங்களைக் கொண்டாடும் புலையர்களைப்பார்த்து நந்தனார் சொல்லுவார்,

விருத்தம்.

இத்தனைநாட்பரமசிவன்றிருமகிமையிரவுபகலெடுத்துச்சொன் னேன், பத்திபுரிபெந்தனுக்கேயருள்புரிந்தவையன்பதம்பணிவீரெ ன்றேன், இத்தனையுமிழுந்திடவே மனவெறுப்பாயெந்தனையுமவமா னித்தீர்புத்தி,

கீர்த்தனம-இ-ம்-தோடி-ஆதிதாளம்.

பத்திசெய்குவீரோ நடேசனைபத்திசெய்குவீரோ

அநுபல்லவி.

அக்கினிமுகனைப்பெற்ற உத்தமனைவிட — பத்தி
நித்தியதேவர்களுமில்லையென்று

சரணங்கள்,

சாமமதர்வணயிருக்குயசுர்வேதமுஞ்
சாற்றுமுபநிஷத்தும் தற்பரன் அரனென்று
ஏமாறுமற்சொல்லியின் புறமில்லையென்று
எவர்களுமறியவே யிப்புவிதனிலின்று — பத்தி

ஆகமமிருபத்தெட்டாதபுராணமும்
அயன்கீதைமுதலான அனந்தஸ்மிருதிகளும்
பாகமாகியபிரமவம் பரமனொருவனென்று
பண்புடனுணர்த்திடும் பான்மையதாலின்று — பத்தி

கௌதமர்முதலானவிருடிகளனைவரும்
கரியமால்தொழும்பங்கஜனென்றனுதினமும்
புவனத்தில்போற்றியே யேற்றினதாலவர்
புகழுமபுண்ணியபதம்பொருந்தினரென்பதால் — பத்தி

அரியயனிந்திரன்முதலானதேவரும்
அரனடிதன்னையே அன்பாய்ப்பூசித்ததால்
பரிவுடனவர்செல்வம் பழுதுவாராமலே
பாவித்தார்சிவனென்று பத்தர்சொல்வதினாலே — பத்தி

வியாசமுனிவரும் அத்தரடியார்களும்
விஷ்ணுபரமென்றுவிளம்பினதால்முன்னம்
காயாசிக்கங்கைகரையிற்கைகளிருந்தும்
கல்லாய்த்தானேயவர்சமைந்ததினாலேயும் — பத்தி

தில்லையம்பலத்தில் திருநடமாடிடும்
தேவாதிதேவனைத் தினம்பணிந்தேத்தியே
அல்லல்சம்சாரக்கடலினில்முழுகாமல்
ஆனந்தக்கூத்துகளாடிக்கொண்டுநீங்கள் — பத்தி

விருத்தம்,

இத்தனைகாட்பரமசிவன்றிருமகிமையிரவுபகலெடுத்துச்சொன்னேன்பத்திபுரியெந்தனுக்கேயருள்புரிந்தவையன் பணிவீரென்றேன் அத்தனையுமிழந்திடவே மனவெறுப்பாயெந்தனையுமவதலப்படுதிரபுத்திசொல்வேனென்றவர்கள்முழந்தாளிற்றடிகொண்டு புனைந்திட்டாரோநந்தனார் மகாபலசாலியானபடியால் புலையர்களைச் சிட்சிநும் சிவநாமத்தைச்சொல்லுவார்.

தண்டகம,

தத்திபுலிப்போலேதாண்டிக் குதிப்பார்
முத்தமிடுவதைப்போல்முகத்தைக் கடிப்பார்
வார்கொண்டுசட்டிவலோத்தும் பிடிப்பார்
மணிக்கல்லெடுத்துத்துடைக்குள் ளெரிப்பார்
பல்லாரசுரண்டியேபாம்படித் திருப்பார்
கல்லாலெதிர்ந்துமவாகாயம் படுத்துவார்
குப்புறத்தள்ளியேவைப்பினி றொன்றூர்
சிவபரமென்றுநீர்செவிப்பீ றொன்றூர்

வசனம,

இப்படிசிட்சித்தபின்பு புலையர்களெல்லோரும் நந்தனூரடிக்கு
ப்பயர்து பத்திசெய்யத்தொடங்கினூர்,

கடுக்கா;

அரகரசிவசிவஅம்பல வாணு
தில்லைபமபலதேசிக நாதர்
புரமூன்றெறிந்தபொன்னம்பல வாணு
கரியுரிபோர்த்தகருணை கரனே
அனுதினமன்றிலுனாடிய பாதா
பிழைபொறுத்தருளும்புண்ணிய மூர்த்தி

வசனம்,

மூடப்புலையர்களுக்கு புத்திதருவாயென்று அவர்களுமிப்படிச்
சொல்லித்தொழுவார்,

கீர்த்தனம்-இ-ய-எதுகுலகாம்போதி-ஆதிதாளம்,

பல்லவி,

பத்திகள்செய்தாரோ பரமசிவ பத்திகள்செய்தாரோ

சரணங்கள்.

பத்திகள்செய்தா நற்றவம்புரியுமனந்த
சித்தமகிழ்ந்திடவத்தனைபேர்களும் பத்திகள்
எடுப்பான்சிவனைதபடிப்பான்தடியொன்று
பிடிப்பான்காலுக்கு அடிப்பானென்றே பத்திகள்
கல்லாலவனிங்கேசெல்லாலவனதி
வில்லாதவன்வெகுபொல்லாதவனென்றே பத்திகள்

வசனம்,

அந்தச்சேரியிலே புலையர்கள் பத்திசெய்தால் சேரிசிவலோகம்
போலேவிளங்கியது சிலநாளுக்குப்பின்பு புலையர்களெல்லாருங்கூடி
நந்தனைப் பணிந்து நல்ல வார்த்தைச்சொல்லி நாங்களெல்லோரு

ம்நாளொன்றுக்கு மூன்றுவிசை சிவனேயென்று சொல்லுகிறோம்ம
ற்றவேளையில் எங்கள் பண்ணைத்தொழிலை செயவேணுமென்று மக க
நந்தனார் நல்லது அப்படியேதப்பாமல் செய்யுங்களென்று நந்தனார்
சொல்லச்சேரிபெரியகி[illegible]னுடன்திருப்புன்கூருக்குப்போய்வந்தபக்
திபரிபூலையர்கள் நந்தனைச்சுற்றி அடிபணிந்து சொல்லுவார்.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

கொள்ளையெனும்பிறவிவினைமூலைவிசாமம்
குடிமாறிப்போவதற்கோவகைக்கேட்டு
கள்ளமனக்குரங்கதனைவிடையமாக்கு
கட்டியிருந்தாலிருந்தவிருத்திபோச்சு
உள்ளங்கைக்குள்ளிருக்குங்கனியைப்போல
உருவில்லாதான்மாவோரலுத்துவாழ்வீர்
எள்ளளவும்பிசகில்லையென்றுஞானம்
ஏற்றுவார்மும்மலத்தைத்தூற்றுவாரே,

கீர்த்தனம்-இ-ம்-எதுகுலகாம்போதி-ரூபகதாளம்,

பல்லவி,

பார்த்துப்பிழையுங்கள் நீங்கள் பார்த்துப்பிழையுங்கள்

அநுபல்லவி,

பார்த்துப்பிழையுமிந்தசோற்றுத்துருத்தியை
எத்திக்கொழவேண்டாம் காற்றுப்போகுமுன்னே — பார்

சரணங்கள்,

ஆத்திமதிசூடுங்கூத்தனிடமாய்
சூத்திரத்தையிந்தசேத்திரத்துள்ளநாடி — பார்
வீற்றிருப்பீர்காலங்காத்திருப்பான்சிவ
சாத்திரத்தைஞானநாத்திரத்தாலுற்றுப் — பார்
மூலக்கனல்தாண்டிமேலக்கனைவந்து
பாலைக்குடியிந்தநாளுக்குள்வாராமல்
பாலகிருஷ்ணன்றொழுங்கோலக்கண்களை
மேலுக்குமேல்நாடிசாலர்கலியற

[கீ]ர்த்தனம்-இ-ம்-யமுனகல்யாணி-அல்லது-சாங்காரூபகதாளம்,

பல்லவி,

தில்லைச்சிதம்பதம்பர — மென்று ஒரு
தரஞ்சொன்னால்பரகதி — யுண்டுண்டு

அநுபல்லவி

நல்லசுருதிமுடி — கண்டுசபா
நாதன்திருத்தாளைச்சிந்தையிற் — கொண்டு தில்லை

சரணங்கள்.

வேரில்லாமலொருவிருட்சமொன் றிருக்கு
விளையும்விளைகளெல்லாமது செய்யுந்திருக்கு
பேரில்லாமல்ஞானத்திகொண்டு தருக்கு
பேரின்பயானைபாப்பிசகாமல் செருக்கு இல்லை
தேசம்புகழுந்தில்லைக்கோயில் வளைந்து
இக்குஞ்சைவபஞ்சாட்சரம் புரிந்து
ஆசையுடனேயர்த்தசாமத்தி லிருந்து
அங்கம்புளகிதமாயடிக்கடி பணிந்து இல்லை
மாயன்கோடாலகிருஷ்ணன்தினந் தேடி
வருந்துஞ்செந்தாமரைமலரடி நாடித்
தாயைப்பிரிந்தவிளங்கன்றுபோல கூடித்
தனித்திருந்துதாளம்போட்டுக்கொண்டாடி இல்லை

கீர்த்தனம்-இ-ம்-கொள்ளிப்பந்து-ஆதிதாளம்.

பல்லவி.

நமக்கினிபயமேது தில்லை நடராசரிருக்கும்போது

அநுபல்லவி.

மார்க்கண்டேயருக்காமறலியையுதைத்திட்
மான்மழுவேந்தும்மாதேவனிருக்க நமக்கி

சரணங்கள்.

இம்மைமறுமைமுதலியாவுக்கும்பரமன்
சின்மயாகாரருபச்சிவபெருமானிருக்க நமக்கி
அரியயனமாரும் ஆலங்கண்டஞ்சமும்
பரிவுடன்வரக்காத்தபரமசிவனிருக்க நமக்கி
திரிவிக்கிரமனாய்வரும்திண்மாயன்மமதையை
விரிவுங்காளனாகிவிளக்கும்பரனிருக்க நமக்கி
ஆதிசேடனுமானுமலசேர்னிலக்குமியும்
மாதலாய்த்தவஞ்செயக்களித்தபரமனிருக்க நமக்கி
இரணியனால்வெறிகொண்டநரசிம்மனை
தரணியில்ரட்சித்தசங்கரனாகிருக்க நமக்கி

கீர்த்தனம்-இ-ம்-தோடி-ஆதிதாளம்

பல்லவி.

சங்கரனைத்துதித்தாடு இனிசனனமில்லையென்றுபாடு

அநுபல்லவி.

பொங்கரவணிந்திடுபொன்னம்பல வனை
புத்தியில்நினைவாகப்போற்றுவாய் சிவனை

சரணங்கள்.

யாரினிற்பெண்கள்பேற் கருத்து போய்ப்
பற்றவொட்டாமலே திருத்து
பேரின்பஞானத்தை வருத்து சுகப்
பெருவெளிநெஞ்சு விருத்து சங்கரனை
நீர்மேற்குமிழியிக் காயம் என்றும்
நிலையில்லாவாழ்விது மாயம்
பேரானமாலயன் தேயன்பெறப்
பேசுவதே யுபாயம் சங்கரனை
மனிதசனனத்தில் தேடுநல்ல
மாதவத்தோர்களைக் கூடு
தனிவெளியரமொரு வீடுதன்னைத்
தத்துவத்தால்கண்டு நாடு சங்கரனை

வசனம்,

இப்படிச்சொல்லிய நந்தனாரைநோக்கி அவர்சொல்லுவார்

கீர்த்தனம்-இ-ம்-சவாயிதண்டகம்-சாப்புதாளம்.

அவர்கள் புண்ணியவிந்தம்பிறவிப்பிணிக்குமருந்
துண்ணமலிருப்பது உண்மையோ நந்தா
நந்தனார் கண்ணாலேபார்த்திடில்காட்டில்மறைந்திடும்
மண்ணானபூதங்கள்மாயவோ மைந்தா
அவர்கள் இருப்பதுபொய்யென்றிராததுமெய்யென்றும்
இருந்திப்பேசியவகையென்னடா நந்தா
நந்தனார் உருத்தெரியுதுநாமரூபமல்லவோ
கருத்திலிருந்திக்கொண்டால்காணலா மைந்தா
அவர்கள் விஸ்தாரமாமமிர்தபிண்டமானமத்தை
பத்திக்கொண்டிருந்ததுபகாந்திடும் நந்தா
நந்தனார் வித்துள்விருட்சமடங்கியவாறுபோல்
சத்துக்குள்ளண்டசராசர மைந்தா
அவர்கள் புத்திக்குளெட்டாதபோதத்தைநாமுண்டு
முத்திபெறும்வழிமொழியுமோ நந்தா
நந்தனார் அத்தனிருக்குமிடமன்னமபாதிகள்
பத்துதலில்லாப்பரவெளி மைந்தா
அவர்கள் தத்துவங்கள்தொண்ணூற்றாறுங்கடந்திடும்
வஸ்துவைநாமெண்ணுமவகையேது நந்தா
நந்தனார் நித்திரைபெழுந்தபின் நினைவுடனேகூடி
உத்தாரம்பேசியேதுண்மையே மைந்தா
அவர்கள் பித்தனைவேறுநீபேய்பிடித்தாற்போலுஞ்
சித்தவிகாரங்கள்தெளியுமோ நந்தா

நந்தனார் பத்திவலைவிசிப்பார்த்திடும்வேளையில்
தத்திருந்த்திநிர்தாண்டவ மைந்தா
அவர்கள் சிலமுள்ளநல்லசேதிசொன்னாயுந்தன்
காலுக்குக்கம்பிடக்கண்டோமே நந்தா
நந்தனார் பாலுக்குச்சர்க்கரைபலித்ததுபோலுங்க
ளாலேயபல்வேறுவீண்நாடாது மைந்தா
அவர்கள் தூலசரீரத்தைச்சுமந்துப்பிள்ளைப்பூச்சி
போலேயானோமுந்தன் புண்ணிய நந்தா
நந்தனார் பாலகிருஷ்ணன்தொழும்பரமசிவனரு
ளாலேபொங்கிவருபானந்த மைந்தா

எண்சீர்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

காரமென்றுசொல்லேறலைப்போட்டு
உறுதியெனுமிருபுலக்கையிலேந்தி
வாங்காரமென்றதட்டுவாகையிட்டு
வடிந்தடியேநண்ணலியதைப்புடைத்தெடுத்து
ரீங்காரசிவமேயாகநிஷ்டைகொண்டு
நிர்மலமதாயவருஞ்சுற்றிவத்து
பாங்கானநந்தனிருதாளைப்போற்றிப்
பணிந்திட்டார்திருநீற்றையணிந்திட்டாரே.

வசனம்,

அவர்கள் நந்தனாரைவிட்டு நீங்கித் தனித்திருக்க மனம்வாரா மல் சொல்லுவார்.

விருத்தம்.

இல்லையிற்போகவேண்டாம் திரும்பிவந்தாலும்மைச்
சொல்லாதுபண்ணைப்பார்ப்மான் மனங்கொண்டபடியாலிந்த
எல்லையிலிருந்துதானே யீசனார்தி நாமத்தைச்
சொல்லியேகாலமவீட்டிற் சேருவோம்வாரென்றார்

வசனம.

அனல்கண்ட மெழுகதுபோலுருகிப் பத்திவெள்ளம் பெருகிச் சொல்லியபிபுர்களை கவராவிங்ஙனம்பண்ணனி கண்ணீர்சலம் பெருகச் சொல்லுவார்.

கீர்த்தனம்-லாவணி-ஆதிதாளம்.

இல்லையெளியிலெகலந்துசொன்னாரவர் திரும்பிபவருவாரோ
எல்லை ன்னை பேர்னிப்பிறவாவொன்றியம்புவதறியாரோ
பெண்பிள்ளை ஸ்வெறுங்கூட்டமது பேய்ச்சுரக்காய்தோட்டம்
கண்டுகொள்வார்பெரியோரறிவிற்கனகசபையினாட்டம்
ஒருவாதினையல்தெரிசனங்காணத்தேடித்திரியாரோ
ஆதிதாகியவிந்தமானுடங்கிடைத்தாலானந்தமடையாரோ

குஞ்சிதபாதத்தைக்கண்டாலொழிய குறையகலாதே
சஞ்சிதக்குமராதிகளுடாடியசடலமுந்தாங்காதே
சேரியிடையிலேகுடியிருந்தாலிந்தசென்மமுந்தொலையாதே
சிதம்பரம்போவேன்பதம் பெருவேன்தடைசெய்வதுமறியாரோ
இரவும்பகலுமொழியாக்கவலையிருப்பதுசுகமோடா
இன்பம்பெருகும்பரமானந்தவெள்ளமிழந்துநீபோடா

வசனம்.

சிதம்பரம்போவேன் நீங்களிங்கே இருங்களென்று நந்தனார் சொல்லுவார்,

கீர்த்தனம்-இ-ம்-செஞ்சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி,

சிந்தனைசெய்துக்கொண்டிருந்தாலுங்களுக்
கெந்தவிதமுங்குறையேயிலாமல் சிந்தனை
அந்தணமுனிவருமிந்திரனமரரும்
வந்துபணியுமரவிந்தபொற்பாதத்தை சிந்தனை
மாமனைவதைத்தவன் காமனையெரித்தவன்
மான்மழுதரித்தவன் தாமரைபாதத்தை சிந்தனை
தம்புருவணிந்திடுந்தும்புருநாரத
ரும்பணியும்பொன்னம்பலவாணனை சிந்தனை
வெம்பியதும்பிக்கருளியபாலகிருஷ்ணன்
பணியுந்திருவம்பலநாதனை சிந்தனை

கீர்த்தனம்-இ-ம்-பூரிகல்யாணி-அல்லதுசாமாராகம்-ஆதிதாளம்.

பல்லவி.

தில்லைத்தலமென்று சொல்லத்தொடங்கினு
லில்லைப்பிறவிபிணியும்பாவமும்

அநுபல்லவி.

சொல்லுக்குமிதுவேசிவலோகம்
எள்ளத்தனையறஞ்செய்யில்மோகத் தில்லை

சரணங்கள்.

ஆகமவேதபுராணங்கள் சாத்திர
மருந்தவம்புரிவாருக்கருளிய பாத்திர
மாலயமாயிரத்தெட்டினி னேத்திர
மானந்தத்தாண்டவமாடிய சேத்திர தில்லை
கணத்திலாடுமணிமாதி சித்தியும்
காத்திலாரும்விண்ணுட் வெற்றியும்

இணையில்லாதகுருசாஸ்திர பத்தியும்
இகத்திற்குரியனவருஞ்சிவபத முத்தியும் இல்லை
பரமரகசியமொன்று பார்க்கலாம்
பா கிருஷ்ணன்கவிபாடிக் கேட்கலாம்
கருமவினைகளடங்கா ற் போங்கலாம்
கசடர்கட்குமுத்தியுமுண் டாக்கலாம் இல்லை

வசனம்.

நந்தனார்ஞானவுபதேசஞ் சொல்லக்கேட்குமுன்னே நந்தனரு டன் திருப்புன்கூரிற்போய்சிவதரிசனஞ்செய்துவந்தவர்களாகிய அ றுவன் தொந்தி ஆனையேறிமுத்துமாட கபுனிகாத்தான் பாச்சலூரான் ஆண்டிசேவகன் சொறியன்வெறியன்காணியான் எல்லைச்சுற்றியென் றுபெயரிட்டவரிந்தஆறிருபேர்களுமானந்தமடைந்து அவரவர்கள்நி ஷ்டையிலிருக்கத்தொடங்கினார் மற்றப்புலையர்கள் கூட்டங்கூடி நந்தனார்நம்மைநாளொன்றுக்குமூன்றுதரஞ்சிவநாமத்தைச் சொல்ல ச்சொன்னகுற்றத்தைப்பாராட்டிநந்தனையடிமைகொண்ட அந்தண னிடத்திற் சொல்லுவார்,

விருத்தம்,

இரவுபகல்பரமசிவனிணையடியேதொழுதிருக்கு மின்பங்கூறிக் கனைபுரளுங்கடலைபோற் சிவத்திரிடைக்கருத்துணரக்கண்டெல்லா ரும்பாவிவரும்புலையர்களும்பண்புரவேநெறிகாட்டிப்பகரக்கேளீர் அ ரியதொரு அந்தணவனடிமைபுரியுந்தணர்பாலரிக்கைசெய்வார்.

தொண்டிச்சிந்து-இ-ம்-பைரவி-ஆதிதாளம்.

ஐயேஒருசெதிகேளும்உங்கள் அடிமைக்காரப்பறையனடத்தை யெல்லாம்வரவரக்கெட்டுப்போச்சுசேரியில் வழக்கமில்லாதபடி பழக் கமிட்டான்குடியிருக்கமாட்டோம் எப்போதும் கூக்குரல் போடுவா னுக்கமறந்தேஇருப்ப னொருவேளை தில்லைச்சிதம்பரமென்று சொல் லிமதம்பிடித்தே அழைப்பானொருவேளை எங்களையும்அண்ணே வர வரவென்றுசொல்லி கிண்ணாங்கொட்டிகுதிப்பா னொருவேளை திக் குமுக்கல்கொண்ட வன்போ லேதையோகண்டவன்போல் களிப்பா னொருவேளைமரம்போலேகையசக்கல்காலசைக்கல் மெய்யசைக்கவும் இருக்கானொருவேளை தாளம்போட் டெக்கலிகொட்டியே,குடிசைகு ட்புகுந்துபேசானொருவேளைகண்டதெல்லாம்பிரட்டென்றுசொல்லு வான்முரட்டுதனம்மன்னொருசாமி போலேகிளம்பி வாய்விட்டலறுங் குரலும்றெட்டு ஐயோசிவனேயென்பான்கீழேபுரண்டமுவான் யா னையுந்தொழுவானே தூண்டிமீனதுபோலே துள்ளித்துள்ளித் குடி

ப்பான்பற்களைக்கடிப்பானேசிவனென்றுமூன்றுதரம் நாங்களுஞ்செ ப்பவேணுமல்லாவிடில்வைப்பிறுதைப்பான்கோவிலிற் போவோமெ ன்பான்எங்களையுங்கும்பிடச்சொல்லியில்லாவம்புபண்ணுவான்சுற்றி வரச்சொல்லியடிப்பான்சிவன்பேராச்சொல்லடா சந்நிதியில் நில்ல டாவென்பான் சொல்லித்துலைக்கவேணும் இல்லாவிடில் சுக்குமாந்தடி கொண்டுநோக்கிவிடுவான் கொம்பேறிமூக்கன்போலேமுதுகினில்குத் துவான்புலிபோலேதத்துவானே இதுவென்னகாரணமோ எங்களுக் கீனமாயிருக்குதுமானமல்லவோ கறுப்பண்ணசாமிதானோ இருளன் காட்டேறியோவீரையன்விட்டேறியோபாவாடைராயனோதானோ ரண பத்திரகாளியோ வுன்மத்தவீரனோ பூசைகள்போட்டுப் பார்த்தோம் ஒன்றிலும்போவதில்லைகாரியமாவதில்லையே எங்கள்வள்ளுவனைக்கே ட்டோம்அவனெடுத்துச்சொன்னானிதை விடுத்துச்சொன்னார் மயான உருத்திரனார்பிடித்துவாட்டுகிறா ரிப்படியாட்டுமென்றார் தெளியா தென்றுசொன்னார் ஐயே வெளியாதென்றுசொன்னார்.

கீர்த்தனம்-௯-ம்-கன்னடா-ராகம்-ஆதிதாளம்

பல்லவி.

சேதிசொல்லவந்தோம்நந்தனார் சேதிசொல்லவந்தோம்

அநுபல்லவி.

சாதிமுறைமைதெரியாதவனுமக்கு
வந்தவனென்றெருமாதமாய்த்தெரிந்த சேதி

சரணங்கள்.

ஏரைப்பிடித்துசற்றே யுழுவான்மண
தேங்கித்தள்ளாடியே விழுவான் எங்கள்
சேரியைப்பார்த்தே யழுவான்சிவ
சிதம்பரமென்றே தொழுவானையே சேதி
எத்துமுடியைக்கையி லெடுப்பான்அதை
கடத்தெறியாமலே விழிப்பான்இதைப்
பார்த்திடும்பேர்களைப் பழிப்பான்அடே
பாவியென்றெங்களை யடிப்பானையே சேதி
உதட்டையசைத்துமுணு முணுப்பான்அவன்
வனுறக்கத்தையும துறப்பான்நாங்கள்
அதட்டிப்பேசினு லடிப்பான்பொன்
னம்பலவாணனைப் படிப்பானையே சேதி

கீர்த்தனம்-இ-ம்-கமாசு-ஆதிதாளம்

பல்லவி.

அடக்கியாளுமையே இவனை அடக்கியாளுமையே

அநுபல்லவி.

அடக்கியாளுமிந்தத்துடுக்குக்காரனிவனை
யடித்துப்பிடித்துக்கண்டித்துபடபடத்து அடக்கி

சரணங்கள்,

பொன்னம்பலவாணனென்றிவன் பேசி
பொழுதுபோக்குவான் சாம்பலைப்பூசி
சனனதங்கொண்டவன்போலவே வாசி
சண்டைபிடிக்கவருவானிவன் தோடி அடக்கி
பலித்துறைபோலெருமந்திரம் போட்டான்
பறையையானயிளிதங்களைக் கூட்டான்
குலத்தைக்கெடுக்கவந்தானிவனொரு கோட்டான்
கோபக்காரனெங்கள்வழிபட மாட்டான் அடக்கி
குளத்தைவெட்டச்சொல்லிக்கூலியைக் கொடுத்தான்
கூட்டிக்கொண்டுபோய்ப்பயல்களைக் கெடுத்தான்
களத்தைச்சிங்காவெபங்களைவிடுத்தான்
காடுமண்டிவருஞ்சுடலையிற் படுத்தான் அடக்கி

வசனம்.

சேறிசொல்லவந்த புலையர்களைப்பார்த்து வேதியர்சொல்லுவார்.

விருத்தம்.

காலமேவந்தாலிங்கேகள்ளக்கும்பிடுகள்போட்டுப்
பாலனைபபோலேபேசிப்பசப்பினன்போடாவென்றேன்
வேலைக்குழலகிலிந்தவினனைப்போலேகாணேன்
சீலமாஞ்சிதம்பரத்தைச்சேரவேவிடைகொடேனே

வசனம்.

அந்தணர்சொன்ன மொழியைப் புலையர்கேட்டு மிகவுஞ் சந்தோஷங்கொண்டு சேரிவந்து சேர்ந்தன் நந்தனொப்போதும் போலே அந்தணரிடத்தில் வருகிறார்.

துக்கடா-ஆதிதாளம்.

நந்தனும்வந்தார்வெகு
சொந்தமானதங்களையனைக்காண நந்

அங்கமுழுதிலும்நீறுபூசியே அரகராசிவசிவவென்றுபேசியே
சங்கையாருக்கருக்கைகள்வீசியே சாமிசாமியென்றுதன்னையேசியே
தில்லைச்சிதம்பரபள்ளுபாடியே தெரிசனங்காணேனென்றுவாடியே
அல்லலறுஞ்சிவலோகந்தேடியேயடையவேணுமென்றிங்கோடியே

நந்தனாரும்வந்தார்.

விருத்தம்,

சாதிகுலம்பிறப்பென்னுஞ்சந்தேகந்தெளியாதுதானுயக்கிற்கும்
பேதைகுணம்பிற்றற்றுப்பேரின்பம்வருடத்தப்பணிக்காக்கும்
ஆதிபராபரவென்னுந்திருச்சிற்றம்பலத்தைக்கண்டறுவீருன்ன (ர்
வேதமொழிவிளங்கிவருந்திருவாயால்விடைகொடுத்துயிம்வீரொன்று

கீர்த்தனம்-இ-ம்-உ-சேவி-ரூபகதாளம்.

தில்லையம்பலத்தலமொன் றிருக்குதாம்கண்டபேர்க்கு
சென்மமானபிணியைக் கருக்குதாம்
உயருஞ்சிகரக்கும்பம் தெரியுதாம்கண்டபேர்க்கு
உள்ளங்குளிரக்கருணை பரியுதாம்
பண்ணவாயன்மாலுந் தேடுமாம்தில்லைக்காட்டில்
பாம்புபுலிக்குநிர்த்த மாடுமாம்
அரியபிரமனெழுத்தைத் தள்ளுமாம் ஆனையுமது
ஆனந்தமுழக்காட்டிக் கொள்ளுமாம்
யோய்வருபவர்புண்ணிய சாமியாம் தருமராசன்
புரத்தில்பழுதுவந்து கேவியாம்
உருவில்லாதகுருவொன் றிருக்குதாம்மூலக்கனலை
ஊதியெழுப்பிக்காணப் பெருக்குதாம்
உருவமாகிவெளியே வருகுதாம்நான்மறைக்குந்
மூணர்வில்லாதகாட்சி தருகுதாம்
போய்வருகஉத்தாரந் தாருமேபொன்னடிதான்
போற்றவேகண்ணாலே பாருமே தில்லை

வசனம்,

சிதம்பரம்போவேனென்றுஅந்தணர்கேட்கும்படிநந்தனார்சொல்லுகிறார்.

கீர்த்தனம்-இ-ம்-சுருட்டி-ஏகதாளம்.

தாதரிகிடதகசந்தரிசன சாகாததிமிதகிட தகணந்தரிதின்ததஇம்தகசந்தரிகுந்தரி தந்தகணம்தனனந்தனனந்தனந்தானகித்தனததனின்னுகிடதகதோந் தத்தின்னுகிடதகதோந் தந்தின்னுகிட தகதோம்.

பல்லவி.

ஆடியபாதங்காணாரோ பிறந்தானந்தம்பூணாரோ

அநுபல்லவி.

நாடுந்தைப்பூரணபூசத்திலே தில்லை
நாயகனார்குருவாரத்திலே மன்றுள் ஆடிய

சரணங்கள்.

பாசமறுத்துடல் வாசியொடுக்கி
டத்திபண்ணுங்காட்டில் பாம்புபுலிக்கி
ஆசையுடனே யருணைப்பெருக்கி
அன்பர்களிக்கச் சிலம்புகுலுக்கி ஆடிய
கொட்டையளிக்கும் புனல்றெழில்நீக்கி
கோடிகாலஞ்செய்த பாழ்வினைபோக்கி
வெட்டவெளியிலே நெட்டிடத்தூக்கி
வேதம்பணிந்திடத்தென்முகம்நோக்கி ஆடிய
சேணுஞ்சடைப்புனல் பூமியில்சொட்ட
சேவித்தநாரதர் பாடியேகிட்ட
கோணங்கிறிந்நண்ட கோளமுமுட்ட
கோபாலகிருஷ்ணனுமத்தளங்கொட்ட ஆடிய

வசனம.

ஆனபடியினாலேநான்சிதம்பரம்போகஉத்தரவுதரவேணுமென்று அந்தணரைத்திருநாளைப்போவார்கேட்கிறார்.

கீர்த்தனம்-இ-ம்-தேசிக்தோடி-ஆதிதாளம்.

பல்லவி,

உத்தாரந்தாருமையே எனக்
கொருவருமில்லைபரசெதியடைய உத்
வித்தைகள்கற்றதுமில்லையாதொரு
பத்தியிற்சென்றுபரகெதியடைய உத்
குற்றங்களெத்தனைகொடியேன்
அத்தனையும்பொறுத்தாதரவாக உத்
பெண்டுபிள்ளையென்றுபேயனைப்போற்றவே
கண்டுகளித்துகாலங்கழித்தேன் உத்
தில்லைச்சிதம்பரத்தைதெரிசித்துவந்துங்க
ளெல்லையைக்காத்துக்கொண்டிருக்கிறேனையே உத்

வசனம்,

நந்தனார் சிதம்பரம்போக உத்தரவு கேட்டதனால் வேதியரடிமையைப் பார்த்துச் சொல்லுகிறார்,

விருத்தம்.

படிபுகழ்தில்லைநாதன்பத்தியேயுருவாய்வந்து
கடிநகராதனூரில் களித்திடும்நந்தனென்று

விடுகிறமுஞ்சிகாட்டிச் சில்விடம்போலேநெஞ்சந்
துடிதுடித்திடவேனாயந் தோடியும்பேசுவானே

கீர்த்தனம்-இ-ம்-தண்டகம்-ஆதிதாளம்,

சேரிமுற்றுஞ்சிவபத்திபண்ணும்படி
விட்டையாமதுவிட்டையாம்
சேதிசொல்லவேணுமென்றிங்கேநீ
வாதையோஅகமகிழ்ந்தையோ
காலைமாலையில்வந்துதெரிசனங்
காட்டுறாய்நிலைநாட்டுறாய்
கதறிஉழூர்க்குருவிகருடன்போ
லாகுமோவதிவேகுமோ
அடிமைவேலைசெய்யுமுனக்கிந்தக்கொண்
டாடமோசனக்கூட்டமோ
அடக்கியாளமாட்டேனோசிங்கக்குட்டி
யல்லவோவதைசொல்லவோ
காளிபூசைய்வர்போடும்போதுநீ
கண்டித்தையாந்தெண்டித்தையாம்
கபடமெல்லாம்வெளிப்படுவதாகவழி
காட்டுகிறேனிதை நாட்டுகிறேன்

வசனம்,

நந்தனார் சிதம்பரம்போறேனென்று சொல்லுவதால் அந்தணர் கண்டிக்கிறார்.

கீர்த்தனம்-இ-ம்-லாவணி-ஆதிதாளம்.

பல்லவி,

பறையாநீசிதம்பரமென்றுசொல்லப்
படுமோடாபோகப்படுமோடா பறையா

அநுபல்லவி.

அறியாத்தனமினிசொன்னாலினிமே
லடிப்பேன்கூலியைப்பிடிப்பேன்பாவிப் பறையா

சரணங்கள்,

சிதம்பரமென்பதை விடுகொல்லைச்
சேறடியிலேவந்து படுகாற்றைப்
பதத்திலேபிடுங்கி நடுகறுப்
பண்ணனுக்கேபலி கொடு அடா பறையா
எப்போதுமொருதடி பிடிகையி
லெடுத்துக்கொண்டேதமுக் கடி எங்கள்

| | |
|---|---|
| கற்பனையாம்பள்ளு | படிகால் |
| கோகாமலேகாடியைக் | குடி அடா பறையர் |
| கள்ளந்திருதற்குப் | பாரு உன் |
| கால்படும்பண்ணையில்வீற் | றிரு இது |
| சொன்னதுமில்லையேஉன் | குரு நீ |
| சுகமுடன்வாழ்ந்துக்கொண் | டிரு அடா பறையா |

விருத்தம்.

ஓதியபடிவீராவென்றும் உக்கிரமாடாவென்றும்
பதிபெறுங்கருப்பாவென்றும் பாவாடைராயாவென்றுந்
துதிபெரும்பிருளாவென்றுந் தொட்டியச்சின்னனென்றும்
மதுவொடுபலிதம்வைத்து வருந்தியேவணங்குவாயே

வசனம்,

அந்தணர் நந்தனாரைக் கண்டித்து மறுபடியும் நல்வார்த்தை சொல்லுகிறார்.

கீர்த்தனம்-இ-ம்-லாவணி-ஆதிதாளம்.

பல்லவி.

நந்தாஉனக்குச்சொல்லுகிறேன்கேள்
வந்த பங்குதோன்றியநாள்முதல்
சொந்தமுறியெழுதிக்கொடுத்துநீ
வந்த பறையனல்லவோமறந்தாய் நந்தா
பாரு இந்தவயல்வரப்பைவெட்டிப்
பேரு அந்தக்கழனியைவெட்டிப்பணை
சேருபொருப்புள்ளவனுனையன்றி
யாரு இதுவல்லவோகாரியம் நந்தா
வாடா உன்கூலியைமுழுதுந்தா
வோடாபண்ணைப்பறச்சிகளுடனே
கூடபறனங்கடோறும்நடப்
போடா இதுவல்லவோபுண்ணியம் நந்தா
பாடுஉன்கருப்புதெய்வத்தைக்கொண்
டாடுகள்ளுநல்லுடன்பூசைகள்
போடுநெல்விளையும்படிக்குவழி
தேடுபுத்திசொன்னேனிதுதான் நந்தா

வசனம்.

வேதியர் நந்தனாரைச் சிதம்பரம் போகாதேயென்று கண்டித்துச் சொல்லுகிறார்.

கீர்த்தனம்-இ-ம்-ராகநாமக்கிரியை ஆதிதாளம்.

பல்லவி.

சிதம்பரம்போகாதே சொன்னேன் சிதம்பரம்போகாதே

அநுபல்லவி.

சிதம்பரம்போனால்இகம்பெறலாமென்று
சேதிசொல்லுறாயுன்சாதிக்கடுக்குமோ — சிதம்பரம்

சரணங்கள்.

கள்ளக்கும்பிடுதனைப் — போடாதே உன்
கபடமெல்லாமிங்கே — காட்டாதே
மெள்ளச்சொல்லடாமுழுநூறடிக்கிறே
தள்ளிவிட்டுவுன்னைத்தருமபடிசெய்வேன் — சிதம்
சாத்தைப்பிடுங்கிக்கழனி — நடவேணும் அந்த
நஞ்சைவயலைச்சுற்றி — யுழவேணும்
பார்த்துப்பரமபடித்து — பராதுவாராமல்
பாயுஞ்சலம்விட்டுப் — பார்த்திடுவாய்நீசிதம்
அடிக்கடிமறுத்துநான் — சொல்லுவேனோ நீ
அடிமைக்காரப்பயல் — வல்லவோ
எடுத்துக்காட்டுவேனிருக்குதுசாதனம்
தடுத்துப்பேசினால் — தாளையிலடிப்பேன் சிதம்

வசனம்.

அந்தணர் கண்டித்துச் சொன்னதால் நந்தனார் துயரமடைந்து சேரியில்வந்த சிவனைநினைத்து பக்திபுரிந்து கொண்டாடுகிறார்.

கீர்த்தனம்-இ-ம்-கண்டகம்-ரூபகதாளம்.

பல்லவி.

பக்திபண்ணிக்கொண்டிருந்தால்-முத்திபெறலாமே

அநுபல்லவி.

எத்திசையுமெவ்வுயிர்க்குமவ்வுயிராய்நிறைந்திருக்கும்
வஸ்துவென்று அம்பலவன்மலரடிதினந்தோறும் — பத்தி

சரணங்கள்.

கட்டழகிசேரனிடங்காதலது — போலே
கடுகிவருங்கன்றருகில்லைகபிலையது — போலே
கட்டவரைத்துணியுமில்லாப்பேதையொருக் — காலே
காவலனார்பதம்வருந்தில்களிம்பதனைப் — போலே
கண்டுமுறைநிழைகலக்கண்டடியார்மநுமயக்கம்
கற்பனையாமிப்பிரபஞ்சஞ்சொற்பனம்போலொப்புமிரும் — பத்

தயிர்குடிக்கில்பால்குடிக்கத்தழுவுதல்திருஷ் டார்த்தம்
சடலம்பொறுக்காமல்துவர்தருகிலி மோகந்தம்
ஆயிருந்துவழுத்திந்தமாயையுப சாந்தம்
ஆகுமொன்றுசாதனங்கள்வழங்குது வேதாந்தம்
காயஞ்சனிக்காத்திருக்கக்கண்டுகொள்ளவேண்டுமென்றால்
காசுபணமபாசமதுமாசவே ரோகமுகின் பத்தி
பச்சைமரத்தாணிபோலேபரிந்துமனம் நாடி
பாலகிருஷ்ணன்பணியும்பொன்னம்பலவனைக்கொண்டாடி
இச்சைபொழிந்தைம்புலன்களைந்துகளும் வாடி
ஏகரசமானபரிபூரணத்தைத் தேடி
அச்சமறந்திருவிழிலானந்தநீர்கரைபுரள
அரனேதிரிபுரனேகங்காதரனேபராபரனேயென்று பத்தி

வசனம்.

சேரியில்சிவபத்தி பண்ணிக்கொண்டிருக்கிறபன்னிருபேர்களுடன்நந்தனுமிருந்துபக்திபண்ணும்நாளையில் ஒருநாள்நந்தனார்பன்னிருவருடைய பக்திதிடப்பட்டதோ இல்லையோவென்று அறியப்பரிட்சைபார்த்தார்.

இருசொல்லலங்காரம்,

நந்தனார்-சிவதலத்தின்சிதம்பரமேகாட்சி யென்றார்
அவர்கள்-அவித்தைகளைந்தாண்டிநிற்றலேகாட்சி யென்றார்
நந்தனார்-சிற்சபையின்மகிமையென்னசெப்புவீ ரென்றார்
அவர்கள்-அச்சுதனுங்காணுதவானந்த மென்றார்
நந்தனார்-ஆசையினாலென்னபலனுகு மென்றார்
அவர்கள்-நரகத்திலேசிவநாமகவிழு மென்றார்
நந்தனார்-கற்றதனாலென்னபலன்கண்டோ மென்றார்
அவர்கள்-கொற்றடிமைக்காரன்பலன்கொண்டா ரென்றார்
நந்தனார்-அம்பலத்தைத்திரைபோடத் தொடங்கினரோ
அவர்கள்-சம்புவித்தைமாயைக்கு ளடங்கினரோ
நந்தனார்-மனத்திருத்திக்கொண்டாக்குவாராதொன்றில்லை யென்றார்
அவர்கள்-கலவருத்தமுண்டாக்குங்காராதுமொல்லை யென்றார்
நந்தனார்-சாதியிலேயெளியவன்தானறிவேனோ வென்றார்
அவர்கள்-ஆதியிலேபேதமில்லை அறிவீரோ யென்றார்
நந்தனார்-ஞானமில்லாதவர்முத்திநாடா ரென்றார்
அவர்கள்-ஊனமில்லாச்சிவபக்திதேடா ரென்றார்
நந்தனார்-மதியில்லாதவர்களுக்கெல்லாம்விதியே தென்றார்
அவர்கள்-துதியில்லாதவர்க்கெல்லாங்கதியே தென்றார்

நந்தனார்-பவக்கடலைக்குளப்படிபோல்பகுப்பா ரென்றார்
அவர்கள்-சுகக்கடலிலேப்பாதிசுகிப்பா யென்றார்
நந்தனார்-பாப்பானுத்தாரங்கொடுப்பானோ வென்றார்
அவர்கள்-காப்பாற்றுங்கடவுளுக்குகைப்பார மென்றார்
நந்தனார்-படித்தாற்போல்காட்டிவிட்டேன்பலமாச்சுதென்றுசொன்
அவர்கள்-அடித்தப்பால்போட்டுவிட்டீராராலேயாகு மென்றார்
நந்தனார்-அங்கேயேன்நீங்கள்வல்லையோ வென்றார்
அவர்கள்-இங்கையேனேதுஇல்லையோ வென்றார்
நந்தனார்-எங்குநிறைந்தபூரணங்க ளென்றார்
அவர்கள்-இங்குமிருந்துஇயற்றுங்க ளென்றார்

வசனம.

இப்படியிருக்குங்காலத்தில் ஒருநாள் தனக்குத்தானே பரவசமாய் ஆனந்தக்கண்ணீர் பெருகிப்பாடுவார்.

கீர்த்தனம்-இ-ம்-செஞ்சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி

பாடுவாய்மனமே சிவனைக்கொண்டாடுவாய் தினமே
இந்திரன்முதலிய இமையவர்க்குபகார
நந்தியின்னம்தேறும் நம்பன்பதம்போற்றி பாடுவாய்
ஆலந்தனையுண்டமரனைக்காத்திரு
நீலகண்டன்கழல்பெற நெறியுடன்போற்று பாடுவாய்
சீலமாதவாசித்தத்தினின்றுடுஞ்
சூலபாணியனைனுஞ்சுயம்புதாள்போற்றி பாடுவாய்
மோகமாந்துன்பத்தினால்மூழ்கிக்கெடாமல்
ஆகமமுறையிடும் அந்திவண்ணனைப்போற்றி பாடுவாய்
பஞ்சாட்சரந்தன்னைப்பக்தியாயுருவேற்றி
மெய்ஞ்ஞானம்பெற்றுய்யுமேலோனைநீபோற்று பாடுவாய்

கீர்த்தனம்-இ-ம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி

சிதம்பரமேநினைமனமே முத்திபதம்பெறலாகுமனமே

அநுபல்லவி.

சதம்சத்தெனும்பொருள்பதம்பதம்மய மருள்
சமரசநடம்புரிசாமிசிதம்பரவிமலன்திருவுருநீகொள்ளாச் சித

சரணங்கள்,

ஒழியாக்கவலைகொண்டுவிழலாய் ஆனாய்
உண்மையில்லாலிட்டிடுநிழலாய்

தழுவாதிருந்ததில்லைத்தலமெனுமேல் வீட்டைச்
சாந்ததாலல்லோநல்லசாபல்யமாம் பாட்டை
பந்தமும்பெற பந்தமுமேயற
எந்தனினைத்திர முந்தாரம்முந்சிதம
தேகமெடுத்தவருண்மைபறியாய்-மோசந்
தெரியவைபாவலேசிக்கிமுழியாய்
சாகுமட்டுஞ்சம்சாரமே விட்டு
சலியாமலேயுனைத்துச்சண்டாளமான துட்டு
சம்பாத்தியமது வம்பாருமீதி
நம்பாதித்தறி தெம்பாய்பதி சிதம்
உனக்குள்ளேயுணர்வாய்நிமோனம்உண்மை
ஓர்வழிகாட்டுமே ஞானம்
தனக்குச்சிதம்பாஞ்சேர்ந்ததாலே தன்மயம்
சத்திரமாம்கூட்டும்சாம்பிராச்சிய சின்மயம்
சரிவாசிவதரு வசமயமாய்வரு
முருவெளியெனுமொரு பொருளதுவாந்திரு சிதம்

துக்கடா.

அரகரஅரபகாதேவா

சிவகாமிநாதா தில்லைபில்வாசா

நந்தனார்சிலநாளானபின்புஅடிமைகொண்டஅந்தணரிடத்தில் வந்துசிதம்பரம்போக உத்தாரம் மிகவும் வருந்திக்கேட்கிறார்.

இது அறுசீரடி விருத்தம்,

வேதியரோபெரியவரோநல்லவரோநான்கடையன் விண்ணோர்மெய்ச்சும், சாதியரோபலகலையுங்கற்றுணர்ந்து புரையில்லாதவமேசெய்யும், போதியரோபத்தியில்லாநான்புலையனேதறியேன் புண்ணியமூர்த்தி, யாதிகுருசிதம்பரத்தைக்காணவென்றே யாசைகொண்டேனறுப்புவீரே.

கீர்த்தனம்-இ-ம்-நாதநாமக்கிரியை-ரூபகதாளம்

பல்லவி

தில்லைச்சிதம்பரத்தையொருதரமாகிலுந்
தெரிசித்துவாவென்றுத்தாரந்தாருமையே

அநுபல்லவி

தில்லைச்சிதம்பரத்தைக்கண்டால்பிறவிபிணி
இல்லையென்றுபெரியோர்சொல்லக்கேட்டிருக்கிறேன் தில்லை
அல்லலறுக்குந்திருவம்பலநாயகனை
அல்லும்பகலுமாடுமானந்தம்பெருகிய தில்லை
யாதிமுதல்வாயென்னையடிமைகொண்டல்லவோ
வேதகுலமேபத்தன்மீதில்தயவுசெய்து தில்லை

கீர்த்தனம்-இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி

தெரிசிக்கவேணுஞ் சிதம்பரத்தைத் தெரிசிக்கவேணும்

அநுபல்லவி

தெரிசித்தவுடனுடல் கிலேசபிணிகளறும்
பரிசுத்தமாகுமுன் மறுசுத்தமாகவே

சரணங்கள்

பக்தர்பணியுந்திருக்கூத்தன்சந்நிதிதொழும்
தேத்திப்பிறவியது ராற்றியெப்போதும — தெரிசிக்க
வேதனையடியவர் போதனைமுனிவர்கள்
நாதனைகரங்குவித் தாதரவாக — தெரிசிக்க
ஈசனைபுலியூரில்-வாசனைகனகச
பேசனையென்று கடாசனைப்போற்றி — தெரிசிக்க
காமனையெரித்தவர் வாமத்தினின்றுசிவ
நாமத்தைசொல்லியர்த்த சாமத்தில்வந்து — தெரிசிக்க
ஞாலம்புகழுமவன் மாலையணியும்பே
பாலகிருஷ்ணன்தொழுஞ் சீலபொற்பாதனை — தெரிசிக்க

வசனம்.

நந்தனார் தரிசனஞ்செய்ய உத்தாரங்கேட்க அந்தணர் சொல்லுகிறார்

எண்சீரடியாசிரியவிருத்தம்

புத்திசொல்லக்கேளாத மூடாவுந்தன்
பிரட்டெல்லாநானறிவேன்போடாபோடா
பத்தியென்றுஞ்சித்தியென்றும் பறையர்க்கேது
பாப்பாரதெய்வமது பலிக்காது
குற்றமுண்டுன்சாதியிலே வழக்கமில்லாக்
கொள்கைபறைச்சேரியிலேகூடாதப்பா
பித்தமதுகொண்டவன்போ லிங்கேவந்து
பேசாதேபோபோவென் றேசுவானே

கீர்த்தனம்-இராகம்-அசாவேரி-ஆதிதாளம்

பல்லவி

சிதம்பரதெரிசனமாகியதைச்சிந்திக்கலாமாபறையா

அ

### அநுபல்லவி

சிதம்பரதெரிசனஞ் சதுர்மறையோர்கள்
செய்வதுநியாயம் நீசொல்வதுமாயம்
சொல்லாலே இங்கேயில்லாதே
சேரிக்குப்போடா நாளைக்குவாடா — சிதம்பர

### சரணங்கள்

சனகமகாமுனி யோகிகள்தேடிய
கனகசபேசனைக்கண்டறிவாயோ
பேசாதேகைவீசாதே
வீரனைந்நொழடாவரியையுழடா — சிதம்பர

தவமுடையோர்கள் தரிசிக்குமந்திரஞ்
சிவபதமென்றுசேவிக்கலாமா
ஆகாதுவினைபோகாது
விரைதெளியன்றோ அறுதலிமகனே — சிதம்பர

### வசனம்-

உழுதுசேறுபண்ணி பரம்படித்து விரைதெளித்து நாற்றுபறித்து நடவுநட்டு மடைதிறந்து மடைகோலி களைபிடுங்கி காத்திருந்துபதத்திலறுத்து கட்டியறுத்து நிரம்பிய பட்டடையைக்காப்பதுமில்லை இராக்காலங்களில் பந்தம்பிடித்து தடியெடுத்துகொம்புதப்பட்டை முழக்கிகோலாகலமாகி நாலுபறையரோடிங்கூடி வரப்பைவிட்டு ஊரைசுற்றிவந்துகாக்கும்படி கிராமத்தாரிட்ட காவல்காப்பதுமில்லை உனக்குவேண்டியஊணுறக்கம முதலாகிய தேசகருமமும் மறந்துஎப்போதும் தில்லையம்பலந்திருச்சிற்றம்பலம் சிதம்பரமென்று பிடித்துப்பிடித்துத் தாயைவிட்ட குழந்தைபோல வாயைவிட்டலறி-பேய்பிடித்தவனபோல் மதிமயங்கி உடல்கலங்கி எல்லோரும்பழிக்கக்கீழே புரண்டழுது தத்துப்பித்தென்று தள்ளாடியகாரணமென்று அந்தணர்நந்தனைக்கேட்கிறார்.

### கீர்த்தனம் இராகம் சூரியகாந்தம் ஆதிதாளம்

### பல்லவி

நந்தாவுனக்கிந்தபிரமைவந்தகாரணம்நானறிந்திடச்சொல்லும்

### அநுபல்லவி

அந்தரங்கமுள்ள சொந்தபறையனை
யன்றியிருப்பதுபோய்சண்டைபிடிக்கவந்தாய் — நந்தா

சரணங்கள்

சா திருநமைதுறந்தாய் தில்லைச்
சபாபதியையகினைந்தாய்
சூதுர்காரபறையருடன்கூடிச்
சும்மாயிருப்பதுஎம்மாத்திரம்காண் நந்தா
குலத்திலில்லாதவழக்கம் நீயதைக
கொண்டாடுமுழக்கம்
வெனுத்ததினாலென்ன எ நலமைச்சாலியாது.
மேலியலணிவசோலையகந்தன்னில் நந்தா
திரட்டுபுரட்டுமறியாய்பொல்லாத
திங்குவார்த்தையுரையாய்
முரட்டுத்தனத்தைஎன்முன்னேகாட்டி
விரட்டிப்பேசுறாய்தெறிமயக்கமோ அடா நந்தா

வசனம்

வேதியர் நந்தனைரைப்பார்த்துச் சிதம்பரம்வந்தகாரணமென்னவெ ன்றுகேட்டபின் நந்தனார் வேதியருக்குச்சொல்லுவார்

அறுசீரடியாசிரியவிருத்தம்

மனங்கொண்டவிடமெல்லாம் போகாமலாலைவிட்டு மறித்து வாங்கி அனல்கண்டமெழுத்துபோ லெனதுள்ளங்களதாக வுரிக்கிசசாய்க்குப்பு னலகண்டமேவணிபனைப்-புண்ணியனைப்புராந்தகனைப்போற்றிசெய்யக் கல்கொண்ட தில்லைநகர் போய்வருவேன்கருணைவாழிகாட்டுவீரே.

வசனம்

நந்தனார்வேதியரைப்பார்த்து உத்தாரங்கேட்க அந்தணர்சொல்லுதல்
கீர்த்தனம்-இராகம்-நாதநாமக்கிரியை-ரூபகதாளம்

பல்லவி

நட்டநடுவினையும்பட்டவெளியைத்தொட்டபோதிலும் நட்ட
கொட்டமதியைவிட்டுவிடுகேளடாபண்ணையாளடா நட்ட
கிட்டநெருங்கும்பஞ்சணையுன்சால்பட்டி தினல்பகையைசொன்னாய்நட்ட

விருத்தம்

கதிரொருமுழமேநீளுங் கட்டுமுக்கலமேகாணுந்
துதிபெறுநந்தாவுன்கைதொட்டதேதங்கமாகும்
பதிதனிற்பெருமைசொல்லும் பறையனேயிருந்துதில்லைச
சிதம்பரப்பித்தேன்கொண்டாய்செய்தொழிலேதென்றுரே

வசனம்

நந்தனுருக்குச் சிதம்பரப்பித்துத் தெளியாமையால்வேதியரென்ன செய்யப்போறேனென்று துயரமுற்று நந்தனாரைப்பார்த்துப்புலம்புவார்

கீர்த்தனம்-இராகம்-தனுகரி-ஆதிதாளம்

பல்லவி

பித்தனாய்ப்போனதென்னநந்தா பித்தனா

எத்தனையோபுத்திசொல்லிகேதுப்படித்தும் பித்தனா

சரணங்கள்

சித்தமிப்படி செய்ததாரோ
பற்றுதலில்லாமலே பண்ணியபேராரோ
பத்தியென்றுபே ரிட்டதாரோ
நித்தமுமிப்படியே நிலையிட்டதாரோ-பித்தனா
எத்திசையும்புகழ பெற்றிருந்தும்
வித்தைகளனேகம் விளம்பத்தெரித்தும்
பத்தியோடுசொல்ல ம ர்ந்தும்
கத்தனென்றுபேரிட்டு காணுனக்கிருந்தும்-பித்தனா

வசனம்

மனதிற்துயரமுற்றவேதியரைநந்தனார்மிகவும்வணங்கிச்சொல்லுவார்

அறுசீரடியாசிரியவிருத்தம்

பித்தமதுதெளிந்துவிடமருந்துண்டுதில்லைவனம்பேணிச்சென்று
சத்திசிவகாமிப்பெண்சந்நிதியில்நேராகத்தலைவணங்கித்
தித்தியென்றுநடனமிடுந்திருக்கோலங்கள்குளிரத்தெரிசித்தாலும்
பித்தமதுதெளிந்துவிடும்வேதாந்தமழைசொரியும்பெரியகோவே

கீர்த்தனம்-இராகம்-செங்கலா-ரூபகதாளம்

பல்லவி,

பித்தந்தெளியமருந்தொன்றிருக்குதுபேரின்பமன்றுள்ளே

அநுபல்லவி

மற்றமருந்துகள்இன்றுலு ள்ளுக்குவல்லேவல்லேவல்லேஐயேஅடு

———

பாம்புபுலியுமெய்ப்பாடுபட்டுத்தேடிப்பார்த்துப்பயரிட்டது அந்தப்
புரளாந்ததிருமாயனும்வேதனும்பார்த்துக்களித்ததுண்டு

பார்ப்பதியென்றொருசேட்டியதில்பாதியைத்தின்றதுண்டு இன்னம்பா
தியிருக்குப்பறையாரியும்போய்ப் பாரொன்றுத்தாரந்தாரும்பித்தர்
பத்துத்திசையும்பரவிப்படர்ந்தாலும்பார்த்துப்பிடியாரே
தந்திக்குதிகருந் தாளங்கள்போடுந் தண்டை - சிலம்புகொஞ்சுஞ்
சதிகைகுத்தேனோசெங்கரும்போநல்லசித்தமுடைய யாரக்கேளன்
சிந்தைகட்டி யிழுக்குதுஅங்கேசெல்லாய்போதுங்கண்டால்தீருமை
யே பித்தர்
ஊரைச்சொன்னாலும்பாலுக்கேசாலை . . டறுக்கும்
பேரைக்கொல்ல ரடிப்புலம்புகிறார்பெ பேர்களுக்குப்பிழைப்பு
சாருகரையுந்திருவாருந்துசாதியையப்பாராதுஇன்னந்
தீராதநோய்கள்படைத்தவெனக்குத்திருவாரூருந்தீருமையே பித்த

கீர்த்தனை-இராகம்-செஞ்சுருட்டி-ஆதிதாளம்

பல்லவி.

சிதம்பரம்போகாம விருப்பேனோ
செம்மைதனைநினைக்க கெடுப்பேனோ-சிதம்பர
பக்தியுமன்பும பொருந்தினதங்கே
சத்தியஞ்சொன்னேன் சடலமூழ்கிங்கேசிதம்பர
ஆசையுநேசமு மானந்தமங்கே
பேசலும்பாசமும் பிதற்றலுமிங்கேசிதம்பர

வசனம்

இப்படிநந்தனார்சொல்ல வேதியர்மூர்ச்சையடைந்து விழுந்துதெளிந்து எழுந்துசொல்லுவார்.

அறுசீரடியாசிரியவிருத்தம்

நாற்பதுமேலிழுபடவுநட்டாமவில்லை
யார்ப்பதுமில்லைசைவப் பழமதுநின்றாய்பண்ணை
காப்பதுமில்லையுன்னைக் கைவிடமனதுவல்லை
சேர்ப்பதாலாவதில்லைச் சேரியிற்றொலைந்துபோடா

வசனம

என்றுவேதியன்சொல்லிய உத்தாரப்படி சேரியில் நந்தனார்வந்துபன்னிரண்டுபேர்களை பார்த்துச்சொல்லுவார்

திபதை இராகம்-மாஞ்சை-ஆதிதாளம்

கண்ணிகள்

ஆசைநேசராகுந் தோழரேகேளுங்கள்
பேசச்செய்வங்களுண்டோ நசனல்லால்நமக்கு ஆசை
ஆயன்மாயன் அன்றடிமுடிகாணாத

அநுபல்லவி

காதகராமனக்கசடர்சொன்ன சொல்லை
சாதனைசெய்துசாத்திரபிழையோன் தில்லைநாக

சரணங்கள்.

நான்உனக்குப் பண்சோதனைசெய்து
நலமாய்த்தந்த ஆண்டு
தோன்றவேதிசொல்லுஞ்சொற்படிச் செய்கிறோம்
பான்மையாமகித்தப்பத்தியாய் உயர்ந்தவனுக்
சாகளவு நன்மைசெய்தோரைஒருக்
காலும்மறவாத் தன்மை
தாசனுக்கெப்போதுமுண்டுதாமே கண்டு
யோசிக்கப்போகுறீர் இனியேல்நான்செய்தொண்டுவருக
ஏழைநான் தானேகுதும்வாரும்
ஏதொன்றறி யேனே
மேருயடனேயொருமேதிகாளைக ளெங்கே
ஊழியனுக்கும்உழுகயிருக்கொடுப் பீங்களுக

நந்தனார்வருழுதல்

எழுசீரடியாசிரியவிருத்தம்

வணக்கமாய்ச்சொல்லும் வார்த்தையைஉணர்ந்து
வஞ்சனையிலாத வேதியன்றன்
கணக்கில்லாத்தனது பண்ணையாளவசத்தில்
கைப்பிடியாகவேவர்து
பிணக்கிலானிவன்சொற்படியெலாஞ்செய்வான்
பின்விடான்அழைத்துபோவென்ன
இணக்கமாய்க்கொண்டுபோயினர்கள்பர்
ஏர்தொழில்மிகப்புரிந்தனனே

தரு-இராகம்-சஹாநரூபகசாப்புதாளம்

பல்லவி

பத்தியாகஆண்டைசொற்படிசெய்தாநந்தன்பலருடன்மிசப் பற்றி

அநுபல்லவி

கர்த்தனேசித்தங்களித்துக் கதித்தவன்
கமலபாதத்தை நாடிமெத்தக்
காதலாகவேகொண் டாடி
மனம் நீடி பற்றி

சரணங்கள்

| | | |
|---|---|---|
| சீருள்ள ஆதனூர்நஞ்சை | புஞ்சைகளை | |
| சித்தமுமோர்ககொண்டு | பழுது அறச் | |
| சுத்தமத ாகவே | உழுது | |
| காலைப் | பொழுது | பத்தி |
| கருப்புமெவளுப்புச்சிவப்பு | நிறமுள்ளக் | |
| காளைகளைகட்டிப் | பூட்டி-பொற் | |
| காறுமொன்றதிலே | மாட்டி | |
| ஏ | ரோட்டி | பத்தி |
| கந்தன்கறுப்பன்கடம்ப | னிடும்பன் | |
| கரியவனவன் தம்பி | பெரியஞ்சின்னக் | |
| காத்தானவன்மகன் | சொரியன் | |
| குள்ள | நரியன் | பத்தி |
| சீரகச்சம்பாசிறுகருடன் | சம்பா | |
| சிறந்தமணக்கத்தை | நடடுகம்பு | |
| சேர்த்துவைவயு | மிட்டு | |
| பயி | ரிட்டு | பத்தி |

வசனம்

இவ்விதமாய் ஏர்த்தொழில் புரிந்துக்கொண்டிருந்த நந்தனர் இனிமேல் சிதம்பரம்போவேன் போகாவிடில்பிராணனைவிடுவேன் அன்றியும் சேரியில்வரமாட்டேனென்றுசொல்லிக்கொண்டு வேதியர் அப்பால்சென்றுதலைவணங்கிக் கரங்குவித்து மனத்துடித்துக்கண்டித்துச்சிதம்பரபோகஉத்தாரங்கேட்கிறார்

அறுசீரடியாசிரியவிருத்தம்

பொய்ச்சடலம் புழுக்கூடொன்பதுவாசற் றோம்பைபைப் போற்றி செய்யும் துச்சனிவனென்றெண்ணித்தள்ளாமனன் னெறியைச்சொல்ல வேணும் பச்சைமிகுந்தொகுயழகி சிவகாமிமாதுபங்கன்பாதம் பணைஇசைமிகுந் திருக்குதையேஅம்பலத்தைகண்டுகளித்திறைஞ்சுவேனே

தரு-இராகம சாவேரி ரூபகதாளம்

பல்லவி

பொன்னம்பலவாணனடிதொழுவா ரொருவரன்றிப்
புறவிககடலிடையில்கிடந்தழுவார்

அநுபல்லவி

இன்னம்பலதெய்வங்களுமிருக்குமெனகவிவர்
போலவேயில்லையேமையிடத்திலிருந்தருள்செய்திடும் பொன்

சரணங்கள்,

வேதமொருநாலுக்குமறியாதபழம்பொருளாகினும்
வேண்டுபதஞ்சிதம்பரத்தில்வந்து
பாதச்சிலம்புபாசைபலமணிகுலுங்கப்பிறைதிலங்க
பணியம்மாடவேசபையாடவேசபாநந்தகூத்தாடிய பொ
பலநாதனில்சுகானந்தபோலெங்கினும்பரிபூரண
முருவற்றதயருவறறதுகுறையற்றிடுஞ்செல்வக்
கலியம்பரமர்மதவற்றவர்விடைபததினுலுருவற்றிட
கலைககறறவாவலைபக்கவரியயத்தினில்நடமாடிய பொ
இரவுபகல்கருமங்களிழுக்கும்பொறி காரணங்களதை
இருத்து வசப்படுத்தும்வகையெனக்குத்தெரியாது
பரவிவருமாராகாதிறசாணடுங்கிமனதொடுமெவழி
பார்க்குமிடயார்க்குமரிதாககும்பாலகிருஷ்ணன்தொழு பொ

வசனம்

இவ்வகையாய்ச்சொல்லும் நந்தனாரைப்பார்தது வேதியர்சொல்லுகிறார்.

சுலோகம்.

மெள்ளம்பேசுமெழுகிறாயதினமூடாவுனக்கித்தனை
கள்ளக்கும்பிடலாவதெனைபுலனேகாட்டும்பசாசலல்லவோ
துள்ளித்துள்ளித்துடிக்கிறாய்சிவபதஞ்செல்லாதுன சாதியிலே
எள்ளுக்கொல்லையில்மாடுவந்துதொடராதேகும்படிச்செல்லடா

வசனம்

இப்படிசொல்லிய வேதியருடனே நந்தனார்தனக்குத்தெரிந்த வித்தைகளை அத்தருணத்தில்சொல்லிககாட்டுகிறார்

மூன்நந்தனார்பின்வேதியர் இருவருமாகச்சொல்லிக்கொள்ளும்

எட்டிக்குப்போட்டியான இருச்சொல்லலங்காரம்;

நந்தனார்-தில்லையைப்பார்க்கவல்லேயோ வென்றார்
வேதியர்-கொல்லையில்முளகாயில்லையோ வென்றார்

நந்தனர்-கள்ளம்போனலுள்ளதுகாணு — மென்ருர்
வேதியர்-வெள்ளம்போனலுள்ளதுவினையு — மென்ருர்
நந்தனர்-திருச்சிற்றம்பலங்கண்டாய்தேகங்களிக்கு — மென்ருர்
வேதியர்-பொரிச்சகறிகொண்டால்தேகம்பெருக்கு — மென்ருர்
நந்தனர்-அரகரவென்ருல்பாவம்போ — மென்ருர்
வேதியர்-பறையனைக்கண்டால்பாவமா — மென்ருர்
நந்தனர்-வெட்டவெளியிலேமனமூட்டிப்பாரு — மென்ருர்
வேதியர்-பொட்டவெளியிலேகுழிவெட்டிப்பாரு — மென்ருர்
நந்தனர்-எனக்குஉரியஞானமாரிடை மதி — யென்ருர்
வேதியர்-உனக்குநாரியபறையர்சேரியேகதி — யென்ருர்
நந்தனர்-கர்த்தாவேயென்றுள்ளம்பெற்று — ரென்ருர்
வேதியர்-கற்றுமையக்கிளியில்பற்று — தென்ருர்
நந்தனர்-மறையோருக்கெப்போதும்வாயிலேதர்க்க — மென்ருர்
வேதியர்-பறையருக்கெப்போதுபசேரியேசொர்க்க — யென்ருர்
நந்தனர்-கொள்ளித்தேள்போலென்னைக்கொட்டாதே — யென்ருர்
வேதியர்-அள்ளித்தந்தேனென்னைக்கிட்டாதே — யென்ருர்
நந்தனர்-கடுமையாய்வந்துகவலைப்படுத் — துவதேன்
வேதியர்-அடிமையாய்வந்துஅலைப்படுத் — துவதேன்
நந்தனர்-இல்லையோடுன்னைச்சேரேனே — மென்ருர்
வேதியர்-எல்லையோடுமுன்னைப்பாரேனே — யென்ருர்
நந்தனர்-திருவாதிரைவருகுதுபேயேவேனே — யென்ருர்
வேதியர்-மறவாதிருபறையாபோகாதே — யென்ருர்
நந்தனர்-தெரியாதவெள்ளப்போவேனே — யென்ருர்
வேதியர்-மரியாதையல்லபோகாதே — யென்ருர்
நந்தனர்-ஆனையைவிட்டுவழிகாட்டும்பெரியோரே — யென்ருர்
வேதியர்-பிராணியைவெட்டும்பழிகாட்டும்புலையரே — யென்ருர்
நந்தனர்-ஆடிப்பாடிப்படிப்பே — னென்ருர்
வேதியர்-தேடித்தேடிப்பிடிப்பே — னென்ருர்
நந்தனர்-இல்லையிலேசலந்தாபல்காடுவே — னென்ருர்
வேதியர்-கொல்லையிலேவிலந்தாகப்போடுவே — னென்ருர்
நந்தனர்-சிந்தைநொந்துதவிப்பேனே — யென்ருர்
வேதியர்-வந்துவந்துஅலப்பாதே — யென்ருர்
நந்தனர்-கெஞ்சினல்நெஞ்சமுருகாதே — தென்ருர்
வேதியர்-அஞ்சினல்பஞ்சம்வருகாதோ — வென்ருர்
நந்தனர்-சிதம்பரம்போகஉத்தாரந்தாரு — மென்ருர்

வேதியர்-இதம்பெறலாமோகத்தாலேபோது மென்றார்
நந்தனார்-சீக்கிரமாய்ப்போறே னென்றார்
வேதியர்-போக்கிரியாய்ப்போவா யென்றார்
நந்தனார்-அன்னீதஞ்செய்யே னென்றார்
வேதியர்-சொன்னதுதவறே னென்றார்
நந்தனார்-எங்கள் சாதிக்குவென்னவழி யென்றார்
வேதியர்-உங்கள்சாதிக்கு இந்தவழி யென்றார்
நந்தனார்-உற்றது ஒன்று மென்றார்
வேதியர்-பெற்றதுபோது மென்றார்
நந்தனார்-பறையனாய்ப்பிறந்ததென்தலையெழுத்திது வென்றார்
வேதியர்-மறையாய்ப்பிறந்துங்கள்வருத்தமது மென்றார்
நந்தனார்-வாய்க்காதவெனக்குவழிசொல்லு வீரே
வேதியர்-காயக்காதமரத்தில்கலலெறி யமரே
நந்தனார்-அப்போதுமிப்படிச்செய்வதே னென்றார்
வேதியர்-அப்போதுமிப்படிச்செய்ததேன் னென்றார்
நந்தனார்-உலகமனைத்தும்விளங்கும்பறையனாய்ப்பிறந் தேன்
வேதியர்-பலகலைகற்றும்பறையனாய்ப்பிறந் தேன்
நந்தனார்-பழுதானசென்மம்படைத்தேனே தென்றார்
வேதியர்-அழுதாலுங்கள்மம்மடுக்காதோ வென்றார்
நந்தனார்-காப்பதுன்பாரங்கள்விடுவீடு மென்றார்
வேதியர்-நாற்பதுவேலியைநட்டுவிடு மென்றார்
நந்தனார்-அப்பன்கருணையிப்பவியோ வென்றார்
வேதியர்-தப்பினேனதுவுவொப்பிலே னென்றார்

வசனம்

அப்போதுநந்தனார்மெத்தவும்ஐயரைவணங்கிஉத்தாரங்கேட்கிறார்

விருத்தம்.

அல்லயெல்லுங்குழலாள்மோகமண்டாதுவொருக்காத்திருண்டர்
பல்லூழிகாலஞ்செய்தபழவினைத்தொடககறுத்தக்
சொல்லினிமடங்கொளுதச்சுகக்கடலாட்டிவைக்குந்
தில்லைநாயகனைக்கண்டுதெரிசனஞ்செய்வேனென்றார்

கீர்த்தனம்-இ-ம-கண்ணி-பியாகு-ஆதிதாளம்

மார்கழிமாதத்திருவாதிரைநாள் வரப்போகுதையே

மனைதைப்புண்ணாகப்பாணுமலொருதரம்போயவாவென்று சொல்லையே
கட்டையிருக்கையில்சிதம்பரமபோயே கணவேணுமையே
கசடனுமிலுமாசைவிளையுமுன் காலுக்குக்கும்பிடையே
காலிலகமுளைத்தநாள்முதலாயுமக் கடுமைக்காளையே
காலபாசத்தில்காட்டிக்கொடாமல் காப்பாற்றிடுமையே
உள்ளங்காலில்வெள்ளெலும்பாட வோடியுழைத்தேனையே
உண்டதுமுறைகினதன்றியில்வேறே யொன்றுமகாணேனையே
எட்டுமிரண்டுமரியாதைபேதை யெளியோனானையே
இன்னந்தங்கயவயிற்றிடையனுக ம லிடக்காட்டிடுமையே
மெள்ளவெளுகதிடுக்தண்ணீர்குடிகதிடும் ெ நியேனையே
மேதினியினிலயிலுங்கடையேன் வழிவிடவேணுமையே
தானந்தவங்களொன்றுமறு த யேனையே
தளரவிடவேண்டமொருகோடி தருமமுண்டையே
அல்லும்பகலுகளாதாவாலே ஆளாகினேனையே
அன்புடனேநல்லகதிபெருவாயென் றுப்பவேணுமையே

விருத்தம்.

சிலையணிந்திடும்வேனேரிக்கிடச்செய்திடுந்திருந்திருமேனியைக்
கலைந்தனைநிடவேணடுங்காதலைக்கடிலராகியமதலைத்
தலைசுமந்திடுஞ்சேடனார்த்தன்மைகொளும்நந்தனாரை
விலைக்குவாங்கியபெருமையாலீசன்வேணதெல்லாம்பேசுவான்

வசனம்

இப்படிச்சிதம்பரம்போக உத்தாரங்கேட்க நந்தனாருடைய சிவபத் திபரிதாபத்தை ஆதிசேடனாலுஞ் சொல்லவொண்ணாத மகிமைகொண் டமகானுபாவனை தனக்கடிமைககாரனென்று வேணபடிபேசுவார்

கீர்த்தனம் இ-ம் முகாரி ஆதிதாளம்

மாடுதின்னும்புலையாவுனக்கு மார்கழித்திருநாளோ
தேடியெடுத்தாயாரிடத்தேபோய்திண்டாடாதேபோடா
ஆடுதின்னும்புலையாவுனக்கு ஆனித்தெரிசனமோ
நாடுசிரிக்கும்வார்த்தைகளன்றோநாடாதேபோடா
நம்மிடுக்குக்கலியாணமழைநரிக்குச்சங்காந்தி
பண்டிக்குப்பூசைதிருநாளுண்டோப்பறையாநீபோடா
பூசைகள்செய்வாயோஆண்டவன்பொன்னடிதொழுதாயோ
கூசல்போடாதேபோடக்கூழைக்கும்பிடலாகாதோ

கன்னையிலாடுவையோ அங்கேகோணிக்கைபோடுவையோ
இங்கிதமறிவேனடிககடிவந்துநுழையாதேபோடா
அஞ்செழுத்தோதுவையோ உனக்குஞானந்தத்திருக்கூத்தோ]
வஞ்சகவார்த்தைநானறிக்குத்தெரியும் வாராதேபோடா

வசனம்

அடாநந்தா சபாசுகன்றாயிருக்கின்றது நீசிதம்பரம்போக வேண்டு மென்றுகேட்பதை ஆலோசித்தால் மிகுந்தஆச்சரியமாயிருக்கின்றதென்று வேதியர்பின்னுஞ்சொல்லுகிறார்

தரு-இ-ம்-மோகனம்-ஆதிதாளம்

பல்லவி

அடடாநந்தனேதில்லைக்கனுப்புமென்றெனைக்கேட்ப
தாச்சரியமிகவாசசரியம்

அநுபல்லவி

அடடாகட்டுக்கதைக ளைத்துடிக்குசவாது
கடடாவயலைத்தேடி கடவுடைவிப்போது அட

சரணங்கள்

ஈனசாதியிற்பிறந் தோனுனக்கவிடத்தி
லென்னஅலுவ லுண்டுஅல்லவென்று
போனபோதிலுமூவா யிரவரிருக்கும்வீதி
புகுந்துகிடக்கது கொண்டு
மானுமழுவுஞ்சிர மாலையணிந்தவரு
மாற்றலாதிரிபுர மதனையெரித்தபெரு
மானுக்கியலுஞ்சரு மஞ்சனோசவந்திரு
வாதிரைப்பலன்பெற மாட்டாயசெய்படி இருஅட
வேள்விகளொருபுறம் வேதியர்களியற்றும்
மேன்மைகள்மிகுந் தங்கும்அந்தத்
தாழ்மையிலாத்திவ்யத் தலம்போயவருவதற்குத்
தடையிலலையெனப், பொங்கும்
தன்மையிசெல்வங்கண வாகமூடியவரும
ஜாதியிழிவையோசித் தாலேதெரியவரும்
பன்னிப்பன்அப்படித்தேன் பாவாயற்றுயேவரும்

பட்டால்தெரியும்பறையனுக் கென்பதுபோல்வரும் அட
அல்லும்பகலும்சோ றளித்துக்காத்திடுந்தெய்வ
மானவம்பல வாணன்இங்கிருக்க
தொல்லையம்படவேவேண்டா மென்றுரைத்திட்டவன்
சொல்மறந்தநீ வீணன்
இல்லுந்திரியாவரப்பேச் சேதுக்காகபிடித்
திருக்குமெனதுபுடி திரும்பாதடாபகடி
பஞ்சைநீயாசமர்த்து பார்ப்பேனெடடாதடிஅட

வசனம்

வேதியர் சொற்களைக்கேட்ட நந்தனார்நீங்களென்னைத் தடியாலடித்தாலும் பிராணனைமடித்தாலும் கழுத்தையொடித்தாலும் சிதம்பரத்தில் தடித்தானைக் காணுமலிருந்தேனென்று தடுத்துச்சொல்ல வேதியருக்குக் கோபம்பிறந்துசொல்லுவார்

தரு-இராகம்-சுருட்டி-ஆதிதாளம்

பல்லவி,

இனியுன்குற்றத்தைப்பொறுப்பேனே அனுவள
வேணுஞ்சம்மதிப் பேனே

அநுபல்லவி

தனியாம்வேதசாஸ்திரந் தனையுணர்ந்தாலுஞ்சாதி
தன்புத்திபோகாதென்ற சரித்திரம்பொய்யல்லநீ இனி

சரணங்கள்

பலகாலமுப்பழமும் பாலூட்டினாலும்பாம்பு
பழகாதற்குவொப்பாய்ப் பகரலாகுமோவேம்பு
தலம்விட்டப்புறம்போய்நீ தான்சையாதடாவீம்பு
தறையிற்கறந்தபாலுந் தாவும்முலைக்காம்பு இனி
இடையிலிருக்குமிந்த இடும்பன்கடம்பன்சரி
இவர்களெல்லாமலிதோ இருப்போர்கள்சிறுசரி
நடையிலிருப்பேன்மக்கா நல்லவனுக்குஞ்சரி
நானுனைச்சேர்ப்பேனென்று நம்பாதேபரிகரி இனி

வசனம்

என்றுசொல்லிப வேதியர்கடி நந்தனார்மிகுந்த தாழ்மையோடுஞ்சொல்ல வேதியர்க்குக்கோபம்வந்து திருட்டுத்தனங் கொண்ட முரட்டுப்பயலே யென்று மறுபடியுஞ்சொல்லுகின்றார்

கீர்த்தனம்-இராகம்-தனுசரி-ஆதிதாளம்

பல்லவி

திருட்டுத்தனமாத்திரம்வேண்டாம்நந்தா அடாவுனக்கு
திருட்டுத்தனமாத்திரம்வேண்டாம்நந்தா

அநுபல்லவி

முரட்டுத்தனமாய்ப்பே சாதேகிழமூடா
முன்னும்பினுமறி யாச்சூடிக்கேடா
வரட்டுத்தவனைப்போல்வா யாடாதேயா
வயலமுழுதிலுஞ்சிர படுத்திடப்பே டாதிருட்

சரணங்கள்

புத்தியுள்ளவனைப் பழருவர்கொண்டுழுது
புன்செய்நிலமுழுதுஞ் சீருசெய்துவிதைத்த
வைத்திடினம்போற்குடி யாருஇருப்பார்களுன்
வினைத்துதிப்பார்சகல பெருமை
சத்தியமாகக்குண் டைகளைக்கூட்டி
சார்ந்ததற்குவா யாரகீரூட்டி
சத்தியுள்ளமட் டிக்குமேயோட்டி
தக்கவுன்றன்திற மதுமிகக்காட்டி
மற்றுமற்றனைத் தனைத்துமுடிவற
மெத்தமெத்தசித்த மொத்துசெயலாய்திருட்
பட்டாங்குனக்கேதடா பாவிஎன்சொற்படினை
பழனக்களுமீடேறத் தேவிபூசைபரி து
பொட்டெனப்பதம்பணிந்து செவிஇதைமறந்தால்
போக்குவேனேயுன்னிட ஆவி
சட்டமாகவுஞ் சமர்த்தைகாட்டாதே
சரணமென்றுகண் ணீரைவோட்டாதே
தட்டுவனேகை யிஞ்சிக்கிட்டாதே
சலசலப்புகஞ்சிநரி யோடமாட்டாதே
விட்டுவிட்டுவிட்டு விட்டுவிடுவிடு
கெட்டுகெட்டுகெட்டு கெட்டுப்போகாதே.திருட்

பாயுஞ்சலமுழுதும் கட்டிபதனமாகப்
பழயயெருவெடுத்துக்கொட்டி சேறுபோலாட்டி
தோயும்நடமுதலோ நட்டிவாராமற்செய்ய
சொன்னானுட்புமேனே மட்கு
காயமுள்ளபோ தேகீதானடா
கர்த்தன்றனைக்கா ணப்போவானடா
எய்த்துவிட்டுப்போ கப்போபோகப்பாராயடா
யொத்ததிருவாதிரைக் கனுப்பனடா
ராயன்ராயன்ராயன் ராயன்சாட்சியாய்
தீயன்தியன்தியன் தியன்உனைவிடேன்தி

இதுவும் வேதியர் சொல்லுகிறார்

அறுசீரடியாசிரியவிருத்தம்

வானிருந்தவிடத்தேடிக்காணுயல்மாதவத்தோர்மதியங்கத்
தேனிருந்தசெந்தாளைச்சிந்திபபராபுந்தியுறத்தெளிநதாரில்லை
ஊனிருந்தும்புலையாநீ சிதம்பரத்தேசென்றாலுண்டோமுத்தி
தானிருந்தவிடம்விட்டுபோகாமல்சஞ்சலத்தைதள்ளுவாயே

வசனம்

அடாவாடாமூடாகேளடா என்னைப்போலொத்தபெரியவர்களாலே கூடத்தேடி அறியப்படாதஜெகதீசனுடையதிவ்யநாமத்தைதநத்தையுரிஞ்சும்பறையா நீகத்திக்குலைக்கலாமாஇப்படிதத்திக்குதிக்கலாமாவிதத்தை யொன்றுமறியாதவனிக்கேபத்தியெண்ணலாமா நத்திமுத்தி தேடலாம லத்தமான பெரியோர்களிடத்தேசத்தம்போடலாமா இங்கே நித்தம்நாடலாமாவியத்தமான இந்தசென்மமெடுத்துச்சித்திதேடலாமா அங்கேபுத்தி சொல்லலாமா அடா இதுவெல்லாம்விட்டுவிட்டாநாத்தைப்பிடுங்கிநடடா உன்தொழிலைத்தொடடா தோல்கட்டியதடியையெட்டா யாருந்திருடாம லிருடாகளத்திலபடுடாகாவல்கொடுடாபுல்லறுடாமுராடா வழிதெரியாக் குருடா நான்சொல்வதுகேளடா இதுடாவுன்செய்கையென்றுகல்லாலெறிந்துதடியாலடித்துவாயால்திட்டிதேள்போலேகொட்டி இவனொரு ஆள் போலேநின்றான் அவர்நாள்போகுதேயென்றார்

வசனம்

நந்தனார்வேதியனைப்பார்த்து சொல்லுகின்றார் நீங்களென்னையடிக்கலாம் நானும்அடிபடலாம் தங்களுக்குக்கைநோகுமென்று சொல்லுவார்

கீர்த்தனம்-இ-ம்-தண்டகம்-ஆதிதாளம்

பல்லவி

அடித்ததுபோதுமையா-என்னை-அடித்ததுபோதுமையா

அடித்தாலுங்கள்கைவலி யாதோ
அடிமைவேலைசெய்யுமென்னுடன் வாதோ
படித்ததெல்லாமென்மனதிற் படாதோ
பாவியெனக்குயினிமேற்றெரி யாதோ அடி

நல்லவரேயுங்கள்மனதுபிர காரம்
நடக்காமலிருந்ததுமப சாரம்
சொல்லத்தெரியுமோயுனக்குப சாரம்
சுகிர்தசாலியுங்களாலேயிந் நேரம் அடி

வசனம்

ஐயரைத்தலைவணங்கிச் சொல்லுவார்

கீர்த்னம-இ-ம்-மோகனம-ரூபகதாளம்

இவ்வுகாத்தகிள்ளை யாச்சோனீ
எடுத்துச்சொன்னதெல்லாம் போச்சே
பறையன்சொல்லுபழு தாச்சேநீங்கள்
பார்ப்பாரென்பதுமே லாச்சே

ஏழைச்சொல்லம்பல மாச்சேதெய்வ
மில்லாமலெங்கையோ போச்சே
சேரியேசொர்க்கமென் [ருச்சேதில்லை
சிதம்பரமென்பது போச்சே

விழலுக்கிறைத்தாப்போ லாச்சேஎந்தன்
வேண்டுதலவீணாகிப் போச்சே
கண்டத்தைக்கண்டிட லாச்சேநல்ல
காலம்பிறக்காமல் போச்சே

வசனம்

பெரியோர்கள் கோபத்தை எளியேன்தாங்கேனென்று சொல்லுவார்

கீர்த்தனம் இ-ம்-லாவணி-ஆதிதாளம்

பெரியோர்கிசளமவுடயரரவட்டதாற் பெருங்கட்டியாதோ
பேயென்தாங்குவேனோஇம் மாத்திரம்பொருத்தாலையே

அல்லும்பகலுமனைறிந்ததுமேதோ வரியாமல்போனேன்
ஆசைகொண்டேன் திருவம்பலத்தெய்வம் போசஞ்செய்யுதையே
பாவியெனைத்தொடர்ந்த டிதகாலுமென் பாழ்வினைத்தீராதே
பார்தனில்பேர்சொல்லாதவனென்றே படைத்ததுபோதாதே
சிங்காரமொளித்திடும்பிறைச்சியையேவொரு செங்காய்தொடலாயோ
சிதம்பரம்காண்தொடலாமோசாதியில் சின்னவனென்றோ
இன்னமூன்றுசிதம்பரம்போமேனென்று இங்கனேவருவேனோ
அம்மட்டும்போறுமையேயுடலாள்தய விருந்தாலதுபோதும்

இவைநூற்சீரடியானவந்த

விருத்தம்

சேதிவந்தவர்வேதியன்சினைத்தால்
காருகளடாந்திசின் சோலைவின்றவன்கருத்தை
ஏருலாவியபரமனைற்றுன்மனதிருக்கி
தீராறுகியகந்தனுமிப்படிச்செய்தான்

வசனம்

தங்கேளயருக்குத்தலைவலைக்கிபெரியகுப்பிடுபோட்டுஒருசோலையி விருந்துசமாதிபண்ணுவார் தன்னுடையசக்கரத்தை தில்லைவெளியிலேயி லேகலந்துகொளவேனென்று விரவைராக்கியபட்டணந்துடனே சே... ரில்வராமல்தானேயிருந்தார் தன்னுடையதுயரங்களையெல்லாம் அம்ப லவாணருக்கே ஒப்பிவித்துசலுகைகொண்டாடுவார்

விருத்தம்

வேதியரிப்படிசொல்ல வெக்துமனம்வேறாகி வினையோவென்று
சாதியிலேபவமதுநீயன்றோ பிறப்பித்தாய்சுவாமியென்னை
சோதனையேசெய்கின்றாயெவ்வுயிர்க்கு மவ்வுபிராயத் தோய்ந்திருக்கும்
ஆதிகுருவல்லவோநீ பார்ப்பானுக்குள்ளிருந்துமனுப்புவீரோ

கீர்த்தனம்-இ-ம்-சௌராஷ்டிகம்-ஆதிதாளம்

பல்லவி

ஐயாவுன்னடைக்கலம்பொய்யாகியதேகமடைக்கலம் ஐயா

அத்தாநான்வருவேனோ அம்பலத்தைபரவேனோ
சற்றேபாகினுங்காண்பேனோ சந்நிதிகாணுதெண்டஞ்செய்வேன் ஐயா

விருத்தம்

தாரில்லாதவிப் பிறவியைத்தானெடுத்தஞ்சி
ஆறுபட்டனற் கீழ்க்குலமாகிவித்துன்பம்
தீறுபட்டிடுமல்லவோ தில்லையிலின்றால்
வேறுபெற்றிடுவேனதற்கொருபிசகோ

கீர்த்தனம்-இ-ம்-எதுகுலகாம்போதி-திரிபுடைதாளம்

பல்லவி

ஐயோதெய்வமேயிந்தவையர்க்கடிமையானேன்
செய்யாவினைசெய்ததல்லவோ
உள்ளங்கரைந்துருகி உய்யும்படியாய்க்கேட்கில்
கள்ளக்குமரனல்லவோ
ஆலைக்கரும்பதுபோலாச்சுதங்கமுழுதும்
வேலைக்கிடமுமில்லையே
பாவியெனக்கோவந்தபார்ப்பான்மனதிரங்கான்
ஆவிதவிக்குதல்லவோ
கோவில்கும்பத்தைக்கண்டால் கோடிவினைகள்தீரும்
பாவிக்குக்கிடையாதுகாண்.
தில்லையம்பலவாண தெய்வமபுலையர்க்காகக்
கல்லாச்சமயலாச்சுதே
பொன்னம்பலவாவுன்னைப்போற்றும்வகையில்லாமல்
இன்னம்பிறவியேழுமோ
அன்னைதந்தையுநீ யென்றாவிபொருளும்நீ
உன்சந்நிதிவரச்செய்வாயே

அறுசீரடி-யாசிரியவிருத்தம்.

அடிமுடியொன்றுமில்லா தம்பலத்தரசேயுன்பால்
கொடியனுன்வந்தாலென்ன குறையுமோவதனால்நீதி
கடலைசெய்பார்ப்பானைகயில் நடுங்கவோவிடுத்தாயென்றும்
படிமிசைவீழ்ந்தாடிப் பதறுவான்கதறுவானே

கீர்த்தனம்-இ-ம்-லாவணிபமுனகல்யாணி

பல்லவி

செய்யுமுபாயமறியேனறியேன்
அரகரசிவனே தில்லைச்சிவனே

# திருநாளைப்போவாரென்னும்

பத்துவருடகாலமாகவந்து பார்ப்பானைக்கேட்டேன்
சித்தமிரங்கிபோய்வாவென்றொருநல்லசேதிசொல்லக்காணேனையே

செய்யு

பாவிபுலையனாய்ப்பிறப்பேனோ இந்தப்பாரினிலிருப்பேனோ
ஆவிதவிக்குதேபொன்னம்பலவா வுன்னடிக்கமலங்காணேனையோ

செய்யு

பல்லுமுளைத்தநாள்முதலாக இந்தப்பாவிபடுவேனோ
தில்லைநாயகா கனகாவென் றுன்னைத்தேடும்வகைகாணேனையோ

செய்யு

நாற்பதுவேலிநிலமிருக்கிறதை நடுகவேணுமென்றாரே
காப்பதாருகளைபிடுங்குவதாரென்று கடுகடுத்தப்பேச்சுக்கடியேன்

செய்யு

ஆற்றிலேகுளத்திலேவிழுவேனென் றவனைப்பிடித்திழுத்திடுவேன்
பார்த்தினிகிருபைசெய்யாவிடில் பறையன்பழிவிண்போகாது சொன்னேன்

செய்யு

தில்லைச்சிதம்பரத்தைக்காணவிடில்லென் தேகந்தெளியாது
சொல்லிவிட்டேன் பொன்னம்பலவாவுன் சொர்ணசபைக்கு வருவேனோ நான்

செய்யு

## விருத்தம்

கடுவருந்தியும்பணிநன்றாகவுந்தரத்தைச்
சுடிவமேனியபிறவியுணற்றரிக்கவுநசகுமோ
விடுவதில்லையுன்னருநிலுற்றனொருவேங்கைக்
கொடியன்வந்தநினைசென்னதில்லையிற்குறைபோ

## இதுவுமது

மாவளர்தில்லைமாநகரர்வீதியும்மதிலும்
கோபிலுக்கிருக்கூட்டமுங்கண்டுகண்குளிரப்
பாவியாகினேன்காயத்தையேதுக்குப்படைத்தே
னாவிதானிருந்தும்பாகதியடைந்திலனே
ஆதிநாள்முதற்றவம்பெருமாமுனிக்காக
நாதமோங்கவேநாடகம்புரிந்திடுநாதன்
பாதம்போற்றிசென்னேரமும்பாவியாநதன்
ஏதந்தீரவேகனவிலும்சனுமிருந்தார்

வசனம்.

தில்லைத்தலத்தைக் காணாதசென்மமிருந்தாலென்ன போனாலென்னவென்று நிச்சயம்பண்ணி மனதுருகி வாயிற்படியில் கொஞ்சம்நித்திரை போகவேகண்டு அந்நித்திரையில் அம்பலத்தேவன்வந்துசொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-எதுகுலகாம்போதி

பல்லவி.

கனவினிற்கண்டாரோ நந்தனார் கனவினில் கண்டாரோ
மனதிலெப்போதும் வருந்தியடிபணியுங்
கனகசபேசனைக் கண்ணிற்காணாமல் - கன

தீகுடுக்குமுனிகள் காணச்சொன்னேன்
ஊனமில்லாமலுன் னுடையவன்களிக்க
மானிடப்பிறவியி லுனக்கிணையார்மற்றி
மானில்லையெனத்தில்லை நாதனும்வந்துரைக்க - கன

கங்குல்பகலாயக் கசிந்துநின்றநாளாற்
சங்கரனேயென்று சாருநன்றுமேலால்
அங்கபுளகித மாச்சுதுஅதனை
யிங்கேவந்தேனென்று ஈசனைப்புகல - கன

விருத்தம்.

அறிவுமிகுந்தாற்றலுடன் சிவபெருமான்பெயர்சொல்லி யாற்றுநாளில் கருமநவுமிடாழகன் றனதடிமை வெளியாகக்கனவில்வந்து. குறையற வேதமுனிகளோடச்சொன்னேன் உனக்குவிடைகொடுக்கவேயென்று, மறை யோதுமவர்க்குரைத்துநீவிரைந்துவாவென்று மனதுட்சென்றார்.

நந்தனார்கனவில் நடேசமூர்த்திசொன்ன

வசனம்.

நம்முடையநந்தனோ உன்னிடமுனிகளை நமதுபூதகணங்களாலே நாடச்சொன்னோம் வேதியருக்குக்காட்டினால் உத்தாரங்கொடுப்பார்களென்றுசொல்லி தான் அம்பலத்தேசென்றார்

நந்தனார் வயலைக்கண்டு சந்தோஷமடைவார்

கண்ணிகள்.

களையெடாமல்சலம்விடாமல் கதிரொருமுழங்காணுமாம
விளைக்குதுபயிரிருக்குதுஅதைக் கட்டுகட்டவேதோணுமாம்

பழுதிலாம்லேரிகுளங்கள் பள்ளமேடுதண்ணியாம்
பரமசிவனைப்பணியுநந்தனுர் பயிரிடுந்திருப்பண்ணையாம்
கனவில்வந்துவுருவமாகி கருணைமாரிகண்டவன்
கடுகிநடந்துவேதியரிடம் காணவென்றுசென்றனன்

விருத்தம்

அய்யரேவாருமென்று அழைத்திடும்நந்தனுரைத்
துய்யவேதியருங்கண்டு சொல்புவிற்றெய்வமெல்லாம்
பொய்யிதுவென்றுதள்ளிப் புலையனும்வந்தானென்று
செய்யவேண்டியதுசெய்யச் செப்புவானுரைப்புவானே,

பலவித இராகஞ்சேர்ந்த-கீர்த்தனம்- இ-ம் - வராளி-ஆதிதாளம்;

பல்லவி.

வேதியர்-சொல்லுதல்,

நந்தாவுனக்கிந்தமதி வந்ததென்னசந்ததாரு
அந்தரங்கஞ்சொந்தமா யிருந்ததுமறந்துபோய்
விந்தையாய்நினைந்ததன்றோ அந்தவேளைபுத்தியில்லை-நந்த

தோடி,

கொல்லைக்காட்டுநரிபோலே பல்லைக்காட்டியேசுவாய்
கல்லைக்காட்டிகோபங்கொண்டு சொல்லைக்காட்டியேசுவேன்
தில்லையென்றுசொன்னதெல்லா மில்லையென்றுபோச்சுதா
கல்லையென்றுஐயர்சொன்ன சொல்லுநிசமாச்சுதே
சித்தமுந்தெளிந்துதா உற்றதுஉணர்ந்துதா
பத்தியுங்குலைந்துநா கதறலும்பறந்துதா
சட்டம்சட்டம்-நல்லது மெத்த-மெத்த-சந்தோஷம்

மத்தியமாவதி

இப்படிஅப்படிசொல்லாதே தப்பெடுத்தடிப்பையா
சொற்படிபொய்புதலாகநீ மெய்ப்படிநடப்பையா
கள்ளக்கும்பிடுதள்ளட காரியங்கைக்கொள்ளடா
என ... டா எங்குஞ்சுற்றிப்பாரடா
தெய்வமென்ப...ம் தெளிந்துபாருசுற்றம்
கையைக்கொட்டு...தம் கண்டுகொள்ளுநித்தம்

ஊணுறக்கமேயின்பம் ஊனிருந்தாலே துன்பம்
சாண்வயிற்றுக்கு அம்பு சாதிமுறைமைவம்பு
ஓகோபலேபலே சபாசுகண்டுகொண்டாய்

## கேதாரகௌளம்

சூதாடித்தோற்றவன்போல் வாதாடிநிற்பவர்க்கு
வேதாந்தசாஸ்திரங்கள் காதாலேகேட்டிருந்தும்
என்னகாரியம் அதில் என்னவீரியம் தன்னுதன்னு

## புன்னாகவராளி

தில்லையென்பதுகாட்டிலுண்டு கேட்டதில்லையா
தேகம்பட்டால்புண்ணாகும் பார்த்ததில்லையா
அம்பலமாவது ஆகாச மூற்றுப்பாரு
அருளில்லைபொருளில்லை கண்டுசேரு
பத்தியென்றும்சித்தியென்றும் வற்றியென்றும்முத்தியென்றும்
இத்தனைநாள்கற்றகலை அத்தனையும்பித்தமாச்சு
மாறுபாட்டுக்காரன்வார்த்தை கூடுபடுமோ
தாறுமாறுபேசினதால் சோறுபோடுமோ

## நாதநாமக்கிரியை

எல்லாமுழுப்புரட்டு வல்லான்வகுத்தவழி
சொல்லாதேசும்மா இல்லாதே
காரியத்தைப்பாரடா உனக்கினியாரடா
காசுபணஞ்சேரடா-இதுநல்லஊரடா நல்லபிள்ளை

## மாஞ்சை;

கஞ்சிகூழுகுடித்தாலும் பஞ்சமில்லையே
கொஞ்சமிருந்தாலும் சஞ்சலமென்னை

## வத்தியமாவதி

சம்பாநெல்கிடக்குதுனக்குத்தானோன் ஓம்மைச்
சல்லாகிழிந்துனக்குத்தானோன் ஓம்மைக்
கண்டாங்கிச்சேலையொன்று துண்டாய்க்கிடக்குதுந்தன்
பெண்டாட்டிக்குக்கொடுத்து நன்றாய்ச்சுகமாயிரு

## புன்னாகவராளி

துண்டுவேட்டிபோக்குகின்று தண்டைவெட்டிபோர்த்தையா
கண்டாணடிக்கட்டளையில் முண்டிருக்குபார்த்தையா

## போகனம்

தணியில்லாதவனொரு மாணியில்லாதவன்போலே
தோணிலுந்தோணுது கோணிநடந்தாலுமென்ன

பெண்டாட்டியில்லாச் சுகமல்லவோமனன்
கொண்டாட்டங்கொள்ள தனைச்சொல்லவோ

ஆரபி

எருவிட்டுழுதவயல் மறுவிட்டுத்தேவையில்லை
எதுவெட்டினாலுந்தான்குந்தாருவிட்டுப் பார்க்கவேணுந்துரையே
நிலம்பாராததபேர்கட்குப் புனாயேயிதுவல்லால்
வேறேயுண்டோ துரையே இந்தவூருக்கிதுநல்லவிளையே
அப்பப்பாயிதறகு

வேரி

பூலைங்கால்விளைந்தாறல் சேலைக்குக்காணும்
உணவுகூலிக்குக்காணும் குழந்தைபாலுக்குக்காணுமல்லவோ
ஊருக்குளிந்தநிலஞ்சப்பையேநீ வாரியிடவேணுமிந்தகும்பையே

சாவேரி

வாரிக்காலைச்சுற்றிப்பாரு கோரையைப்பிடுங்குநம
தேரியையுழகச்சொல்லு வீரியனநீகச்சொல்லு
செட்டியார்குளத்தருகே மூட்டிருக்கப்பார்த்தையா
வெட்டியனகத்தருகே திட்டிருக்கப்பார்த்தையா

புன்னாகவராளி

எல்லாமுனதுபொருப் பொல்லாமுனதுக்க
மல்லாமல்வேறேதுகதி இல்லையில்லையில்லை
கட்டியடிக்கட்டளையில் விட்டதுமுளைத்துதா
பொட்டைத்திலேகுட்டையிலே நட்டதுபலித்துதா
காடுவெட்டிநஞ்சைபண்ணை மாடுகட்டிவைக்கோல்போடு
பாடுபட்டவுழைத்தாலன்றோ வீடுகட்டிவாழலாம்-நந்தா

வசனம்

இப்படிச்சொல்லும் வேதியனை பண்ணையைப் பார்க்கபாருமென்று நந்தனார்கூடபிடுவார்.

விருத்தம்

பண்ணையாவையும் பகருமென்றழைத்திடப்பரிந்து
கண்ணுலாவிய வேதியன்களிப்புறந்தன்னை
பண்ணுலாவும்பொன் னம்பலனைக்கூத்தனைப்பரவி
எண்ணிலாவரும் காதல்கொண்டிருந்தனாதாமே

வசனம்

கேவலமாகிய நீசன் சிவகணங்களாலே ஒருராத்திரியில் நடவுநட்டு அறுப்பளிக்கும் வடலை வேதியர்கண்டு ஒன்றுந்தோற்றுமல் உலகவாசனையற்று நின்றார்.

நந்தனார்-அம்பலவாணனைக்கொண்டாடி கூத்தாடுவார்.

கீர்த்தனம்-கலிக்கா.

நந்தனானந்தபரிதமாகினன் நந்தனாநம்ஆனந்தமாகினார்
சொந்தமானவயல் வந்துபார்க்கையிலே
விந்தையாச்சுது பலபந்தம்போச்சுது
சிந்தைதீரவேயத்தாங்கத்தில் நந்தனார்

நீசசாதியென்று பேசிப்பேசுமிந்த
தோசிவேதியனு மாசையாகவே
தேசமேற்றுந்தில்லை வாசமாகுநட
ராசமூர்த்திக்குத்தாசனென்றுவரும் நந்தனார்

வாரும்வாரும் மிதைப்பாரும்பாருஞ்சிவ
ஞானேவந்துசெய்யுங்காரியங்களிது
பாரின்மீதிலுனை யாருமில்லையென்
றாரிலுள்ளபெரியோருஞ் சொல்லச்சொல்ல நந்தனார்

சித்தமீதிலொரு குற்றமேதுமில்லை
சுத்தமானவிஷயத்திலுள்ளசிவ
பத்திபண்ணிவெகு சித்தியாகிவர
முத்திதேடிவருபத்தனென்றுமகிழ் நந்தனார்

வசனம்

— நந்தனைப்பார்த்துசிவபத்தர் அபசாரம்பண்ணினே னென்று மிகவுங்குழைந்து சொல்லுவார்.

தரு-இராகம்-பியாகடை-அடதாளசாப்பு

பல்லவி.

நந்தனாரேயுன்றன் பெருமையின்றுகண்டேன்
நானென்வினையை விண்டேன்

அநுபல்லவி

விந்தையைக்குறியாமல் விழலனுணறியாமல்
விம்புக்குக்கச்சுகட்டி விசினேனென்னையாளும் நந்த

சரணங்கள்

அறியாமனத்தினாலேஏதேதோபேசி யுன்
அருமையைத்தெரியாமற்போனேனே மெத்த

வேதியர் புத்தியுண்டுவித்தையுண்டு
பத்திகிடையாது வாயால்
புலம்பினதாலென்னமனமடங்காதுபோதங்கிடையாது

அந்தணர் கிடைக்குஞ்சிதம்பரதெரிசனமென்று
கிருபைசெய்யு மையே
கீழ்குலமல்லவோ நாயினுங்கடையேன் கீர்த்திபெறுவீரே

வசனம்

பரமபத்தனாகிய நீயே எனக்கு அடிமைசெய்பவன்போல் வந்தபடியினாலே என்பிறவிப்பிணி தொலைந்ததென்று சொல்லுவார்.

அறுசீரடி-விருத்தம்,

அவப்பொழுதுபோனதன்றி மறைமுடிவையுரைக்கரிய
பரிவிலுன்னித்
தவப்பொழுதுங்கணப்பொழுதுங் கண்டறியாப்பாவியெனைக்
சார்ந்தாரன்றோ
சிவக்கொழுந்தினடிமையென்றுபெயரிட்டுலேவேகளைச்
செயதநாக
பவக்கடலைக்குளப்படிபோல் தாண்டிவரச்செய்ததுந்தன்
பத்திதனே

கீர்த்தனம்-இ-ம்-ஆனந்தக்களிப்பு

நந்தாசிவ பந்தன்-உன்னை
நம்பாமலேமோசமானேனான் பித்தன்
பூமிக்குள்நீயொரு சித்தன்-இந்தப்
பூமிக்குள்நானொருசாஸ்திரப்பிர சித்தன்
காமிக்குள்ளேவெகு மத்தன்-உன்னை
கண்டுதெரிசித்தபேர்களே முத்தன்-நந்தா

படித்துமென்னவேதங்கள் வேதம்-அதில்
பார்த்ததில்லையிந்தபகவற் கீதம்
எடுத்துச்சொன்னாய்சிவபோதம் அது
ஏற்காமல்போசசுதுஎன்பிடி வாதம்- நந்தா
தெவிட்டாதேசோகம பாணி-உந்தன்
தேகமுழுதிலுஞ்சிவன்திரு மேனி

ருவாக்கினால் என்னையுமிப்படிப்புகழலாமாவென்று மிகவும் வணக்கமா ய்ச்சொல்லுவார்

கீர்த்தனம்-இ-ம்-அமிர்தகல்யாணி

சின்னசாதியல்லவோசிதம்பரம்போய்வருகிறேனென் — சின்
அன்னைதந்தையொருவரில்லை அடைக்கலமென்னையாளவேணும் — சின்
ஈனமில்லாநெஞ்சமாகி இறச்சிதின்றுஉடல்பெருத்த — சின்
அல்லும்பகலுமதுவையுண்டு அறிவுமயங்கியாட்டங்கொள்ளும் — சின்

வசனம்

இப்படிச்சொல்லிய நந்தனைப்பார்த்து வேதியர்சொல்லுவார்

கீர்த்தனம்-இ-ம்-பைரவி-திரிபுடைதாளம்

பல்லவி

ஆருக்குப்பொன்னம்பலங்கிருபையிருக்குதோ
அவனேபெரியவனாம்

சரணங்கள்

வேதபுராணங்களோதினதாலென்ன
வேளைபூசனைமாத்திரமலென்னகாரியம்
சாதனையாகவராதொருநாளும்
மண்ணாசைபெண்ணாசைபொல்லாது — ஆரு

பாணன்மதங்கசுளடங்கலேசெய்தவோர்
பாலகிருஷ்ணன்றினந்தொழுமாபல
வாணனென்றுதாவாயிருப்பாதவன்
வாணவராகிலுந்தானவன்சின்னவன் — ஆரு

வசனம்

பொன்னம்பலஞ்சிவபத்தியுள்ளவன்பெரியசாதி சிவபத்தியில்லாதவன் பார்ப்பானாயிருந்தாலுஞ்சின்னசாதியானபடியினாலே திருப்பன்கூரிலு னக்காக பரமசிவன்சன்னிதியைவிலக்கிதெரிசனங்கொடுத்ததும் குளம் வெட்டினது ஒருராத்திரிகாலத்திலே நாற்பதுவேலிநிலமும் நடராசமூ ர்த்தியேவந்து வுட்டதும் பார்க்கும்போது நீயேமகா புண்ணியபுரு ஷனென்று சொல்லவேணுமேயல்லாமல் வேறில்லையீதுவலாயிலென துவார்த்தையைத்தள்ளினதுமில்லை ஆகையால் எனக்கு குருவாகிநின்று உபதேசம்பண்ணென்று பின்னுஞ்சொல்லுவார்

சேனைபதிபோல் ஞானபதியுண்டு
பாருமேகட்டிக்காருமே உள்ளே சேருமே அதுபோதுமே
சங்கையறவேநின்று பொங்கிவரும்பாலுண்டு
அங்கமிளைப்பாறிகொண்டு தங்கபொம்மைபோலவே
நில்லுமேஅதுசொல்லுமே ஞானஞ்சொல்லுமேயாதும்வெல்லுமே
அட்டாங்கம்பண்ணினாலுங்கெட்டாங்குபண்ணியது
கிட்டாதுகிட்டிவரவொட்டாதுமுட்டியது
பாயுமேபுனைசேயுமே அதுஓயுமேஉள்ளேதோயுமே வேத
மந்திரத்திலேபாடுசாத்திரத்திலேபோக்கும்
தந்திரத்திலேயுமில்லை அந்தரத்திலேபவ
தானமே அதுகானமேமனக்கீனமே பேசாமோனமே அந்த
முப்பாழுந்தாண்டிவந்து அப்பாலேநின்றவர்க்கு
இப்பாலைவிடையாது அப்பாதிருநடனே
ஆடுவார்தாளம்போடுவார் அன்பர்கூடுவார் இசைபாடுவார் இதை
கண்டோருக்கிடையாதுவிண்டோருஞ்சொன்னதில்லை
பண்டோரண்டகோடியெல்லாமொன்றாய்ச்சமைந்திருக்கு
மலைவோ அதைக்கொல்லவோ பறையன்சொல்லவோ
சொல்லவோ நேரமாகுதல்லவோ

கலிவிருத்தம்.

வானமேவிலவும்பர்வாழ்த்திப்பாறையைக்
கானமேசெய்யுஞ்சேவையுரக்கடிகை
ஈனமாமிழிகுலத்தினிலெய்தியநந்தன்
ஞானவாரிகொண்டேயவருளுறநினைந்தார்

வசனம

இப்படிநந்தனார்சொல்ல வேதியர்கேட்டு திவ்வியஞானமடைந்து நந்தனைப்பார்த்துசொல்லுவார்

கீர்த்தனம் இ-ட-ராகம்-ஆதிதாளம்

கண்ணிகள்.

சிதம்பரம்போய்வாருமையா நான்
செயபதந்தவலாமபசாரமையா சிதம்
சிதம்பரம்போவீர்பதம்பெறுவீர் வேறே
சிந்தனைவேண்டாம்நந்தனே இனிமேல சிதம்
எத்திசையிலுமமக்கிணைசொல்லப் போமோ
பதஞ்சலிமுதலென்றுபுகழுமெரியவர் சிதம்

சித்தமுந்தெளிந்தது தெய்வமேநீயென்று
புத்தியுவந்தது பொய்யிதுவல்லவே சிதம்

வசனம்,

இப்படிச்சொல்லிய வேதியனைச் சுற்றிவந்து தலைவணங்கிஒடுக்கவணக்கத்துடனே தூரவிலகிநின்று வேதியனை ஆசீர்வாதமபண்ணச்சொல்லுவார்,

கீர்த்தனம்-இ-ம்-ஒரடியிரெண்டுவார்த்தை ஆட்டா

| நந்தனார் | மறையவர் |
| --- | --- |
| சிதம்பரதெரிசனங்கிடைக்குமோ | கிடைக்கும் |
| சென்மசபலமாமோசொல்லுமே | ஆகும |
| பதம்பெறுந்தவநெறியறிகிலேன | அறிவீர் |
| பரமசிவனருள்செய்வாரோ | செய்வார் |
| சாதியில்தாழ்ந்தவனல்லோ | அல்ல |
| சாத்திரமுறமைக்குஞாயமோ | ஞாயம் |
| ஆதியம்பலதெய்வமகாடுமே | காடும் |
| ஆனந்தமடைவேனைவையமோ | அடைவீர் |

வசனம்.

வேதியனுக்காசீர்வாதம்பண்ணியனுப்பியபின்புநந்தனுநடையகுனுதிசயங்கொண்டாடுவார்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அடியவர்கள்மனமிடியப்பேசினதுண்டபாதமனந்தங்கோடி
படுநாகில்வீழ்வாரொன்றெனவுணர்க்கும்பாவமதுபலித்ததென்று
துடிதுடித்துதொடைநடுங்கிநீர்வடிந்து சிதம்பரத்தேதுதிகள்செய்
கடிபுகழுந்திருத்தொண்டர்நனமெல்லாமுலகரியப்பகருவாரோ

இதுவுமது

சாத்திரக்குப்பையெல்லாந்தள்ளினேனபதறுபோலே
காத்திரஞ்சுத்தமாச்சிதனிந்து நீம்முள்ளமபத்தி
மாத்திரமிருந்தாற்போதுமநீரென்றுயில்லைசைவ
ஷேத்திரமுழுதுஞ்சுற்றிச்சேருவேன்றில்லையென்றார்

கீர்த்தனம்-இ-ம்-சௌராஷ்டகம்-ஆதிதாளம்

பல்லவி.

எந்தநேரமும்நந்தனைசிந்தித்தா
னந்தனுயிருந்தனரந்தணர்
பந்தந்தீரவேயிந்தவுருவாகி
வந்துதோவரந்தந்துதோசிவனென்று எந்த

வசனம்.

விட்டுதோஇந்தவீட்டுக்கவலைகள்பட்டுதோபவசாகரச்சேறழிந்திட்டதோமுத்திவெள்ளம்கரைபுரண்டுதோவென்று எத்திதொழுபவர்எந்நேரமும்வேதியரிப்படியே சிவபத்திப்பண்ணிக்கொண்டு ஆனந்தமடைந்திருந்தார் அப்படியிருந்தநந்தனர் ஆதனூரைவிட்டுச் சிதம்பரம் வருகிறார்.

கீர்த்தனம்-இ-ம்-லாவணி-ஆதிதாளம்.

நந்தன் சிதம்பரம்வருகிறார் ஆதனூரைவிட்டு

கொள்ளிடந்தாண்டியப்பால்வருகையிலே

தொண்டரங்கம்பரவசமாய்எங்கும் பொங்கிச்சிவமயமாய்
அந்தக்கருணைவிருத்தியழிந்து
அனேகசென்மவாசனையை
யனல்கொண்டுதிகைத்தாரோ சஞ்சிதவினையென்றுவருத்தாரோ நந
குண்டலிசத்தியைக்கொண்டு
இளமயிமண்டலம்புகுந்து
சஞ்சரித்துக்கொண்டார் குறையைஅமுர்தமுண்டார்க்கிளையார் நந்
அநாதிமாயகற்பிதமிந்த
நாமரூபாதிபிரசஞ்சமெல்லா
மழிந்துபோமென்பார் குறைகடலெழுந்தநுரையென்பார் நந்
சைவத்தலங்களில்தெய்வமிதுவே
சத்தியம்பண்ணுவேன்நான்பறையன்
சதுர்மறைகேட்டிலேயோமிக்க ஷண்மதங்கேட்டிலேயோ நந்
எட்போதும்நடராசமூர்த்தியின்
இணையடிதொழுதார்க்கேதுறையோ
னிந்திரபதிகிகரோ திரும்பியும்வந்தவர்காண்கிலரோ நந்
ஈசன்கருணைலேசமிலாதவ

ளைத்தனைவேதங்கற்றுறு
மெட்டாப்பெருங்கொம்பு நெருங்கித்தொட்டால்செங்கரும்பு நந்
ஆதனூரிலொருபுலையனுக்காக
அம்பலநாடகமாடுவரோ
வருந்தவம்புரிந்தேனே கனவில்வருந்தியுமிருந்தேனே நந்
அரகரசாம்பசதாசிவனேபொன்
னம்பலத்தாடியதேசிகனே
ஐயேவுன்னடிமை மனதுனையேயுனுனடிமை. நந்
செழுத்துவியனுலகெட்டிச்சிகரங்க
ளைந்துந்தெரியுதுகாணையே
தில்லைந்தலமென்பார் அன்புடன்சொல்லப்பலமென்பார் நந்
குதிப்பாரொருதரங் களிப்பார்கண்ணி
ரருப்பாரானந்தலாகிரியால்
கொண்டாடிப்பாரோ குரவைநன்றாய்ப்பாடிப்பாரோ நந்
பாரளந்தகோபாலகிருஷ்ணன்துதி
பாடுந்திருவடிபணிவேனே
பரகதியடைவேனே பூமியில்மறுபடிவருவேனே நந்

வசனம்.

நந்தனார் ஆதனூரைவிட்டு கொள்ளிடத்தருகில் வரும்போது சொல்லுகிறது.

கீர்த்தனம்-இ-ம்-முகாரி அடதாளம்

பல்லவி.

கொள்ளிடக்கரைபோனான்-நந்தன்
கோபுரங்களைக்கண்டானே

அநுபல்லவி

பள்ளச்சாதியிலும்பறைச்சாதிநானென்று
உள்ளமுருகியவர்வெள்ளைக்கரைபுரள கொள்

சரணங்கள்,

ஓடத்தின்மேடேறிநந்தன்
ஓங்குமகிழச்சிமீறி
காடயெவரும் நல்லநடனக்கூத்தாடியே
நணிபுடன்தரிசிப்பேறலாமென்றுதுதிகொண்டு கொள்
அக்கரைபோனானேநந்தன்
ஆனந்தங்கொண்டானே

சிக்கெனவேசிவசிதம்பரேசனைக்காண
சிந்தைமகிழ்ந்துசிவதியானஞ்செய்துக்கொண்டு கொள்
திருவாதிரைத்திருநாள்செய்யுந்
தினமல்லவோயிந்நாள்
திருநடராசமூர்த்திதிருமுகந்தனைக்காண
சித்தங்களிப்பெருமென்றுறுதிகொண்டு கொள்

வசனம்.

இந்தப்பிரகாரந்தோத்திரஞ்செய்து கொள்ளிடக்கரைத்தாண்டி வருமபோதுதில்லைக்கோபுரத்தைக்கண்டு தெரிசனம்பண்ணுவார்.

கீர்த்தனம்-தி-ம்-தண்டகம்-ஆதிதாளம்

பல்லவி,

கோபுரதெரிசனமே எந்தன் பாபவிமோசனமே

தாபங்கள்மூன்றுந்தணித்துவிடும்நல்ல
சோபனமுண்டாகுஞ் சோதிவிளங்கிய கோபுர
விண்ணளைந்துமேலோங்கியேகண்டு
கண்டுளார்க்கெல்லாங்காட்சியளித்திடும் கோபுர
அல்லும்பகலுமமரர்துதித்திடும்
தில்லைக்கிறையோன்பிரமுமகிழ்ந்திடும் கோபுர

வசனம்,

[illegible]மைப்படியிருக்குதென்றுசொல்லுகிறார்

கீர்த்தனம்-இ-ம்-நவரோஸ்-ஆதிதாளம்

மாங்குயில்கூவியசோலைகளும்வாவிகூபதடாகங்களுந்
தூங்கதிர்மண்டபமெத்தையுஞ் சொர்ணசபேசன்துசமரமும்
நாலுபுரத்திலுங்கோபுரமும் நவமணிச்சித்திரமண்டபமும்
சீலமுறுந்திருவீதிகளுந்தில்லைவேதியர்மாளிகையும்
கண்மனங்களிநிர்ந்தேன் என்கவலையெல்லாமொழிந்தேன்
மண்டலம்புகழுஞ்சபேசன்சன்னிதிவாழ்த்திப்பணிந்துவினறேன்
தஞ்சமென்றடைந்தேனிந்தச்சடலத்தால்நொந்தேன்
அஞ்சவேண்டாமென்றொருதரஞ்சொல்லியழைத்தாலாகாதோ
அப்பாவுன்சரணம்தில்லைக்கரசேயுன்சரணம்
ஒப்பாரில்லாநாடகம்பயிலுமொளியேநின்சரணம்

வசனம்

கோபுரதெரிசனமேயென்கிற கீர்த்தனமுதற்கொண்டு சிதம்பரவிலாசமென்றுபெயர்.

சிந்து.

சிவன்-வேடிக்கைதானென்றுநாடிக்கொண்டே-அறியாதுபோனசி
ருந்தசெம்பொன்னம்பலத்தாடிடைக்கும்பிடவே ஆதனூர்தனிலிருந்
துவிடும் அம்புபோலப்பறந்தையமின்றித்தில்லையருகில்வந்தார்மனந்
தனிக்கொண்டார் குறையாறிக்கொண்டார் கெண்டாமணியோசை

திருநாளைப்போவார் புராணம்,

விருத்தம்,

நாளைப்போவேனென்றுநாள்கள்சொலத்தெரியாது
பூளைப்பூவாம்பிறவிப்பிணிப்பொழியப்போவாராய்
பாளைப்பூங்கமுகுத்தபழம்பதியினின்றுபோல்
வாளைப்போத்தெழுப்பழனஞ்சூழ்ந்திருமருங்கணைந்தார்

இதுபொழிப்புரை

வசனம்.

நாளைப்போவேனென்றுசொல்லி அனேகநாள்கழியச்சபாநாயக
ரைத்தரிசனம்பண்ணவேண்டுமென்றும் ஆசையை அடக்கக்கூடாத
வராய்பூளைப்பூவையொத்த நிலைமையையுடைய பிறப்புகளால் உண்
டாகியசம்பந்தம் நீங்கும்பொருட்டு போகின்றவராய் பாளையையு
டையபொலிவாகியகமுகமரங்கள்சூழ்ந்திருக்கும் மனையையுற்ற தம்
முடையவூரில்நின்றும்புறப்பட்டு ஆண்வாளைமீனானது எழும்பிவி
ளையாடும்வயல்களையுடையசிதம்பரத்தின்எல்லையை அடைந்தார்.

கீர்த்தனம்-இ-ம்-கரகரப்பிரியை-ருபகதாளம்

கெண்டாமணியாடுது கண்டுபிணிவாடுது

முத்துமணிதேடுது நாடுதுகூடுது கெண்டா
பரவசமாகுது பாவங்கள்போகுது கெண்டா
செனனமரணாதிகள் மோகமுதிர்ந்தது கெண்டா

சிந்து,

கெண்டாமணியோசைகாதில்-கேட்குதென்றாரதைப்பார்க்கவெ
ன்றேகொண்டாட்டமாகிவந்தார்-கையைக்கும்பிட்டுடனமக்கம்பிட்
டதோவென்றேமனமகிழ்ந்தார்தெருவீதியிலேவந்துகாதலுடன்கண்
டார்களையாறிஇருகண்களிலானந்தம்பொங்கிடவேநின்றார்மதிற்புரத்
தேவெகுநேத்தியென்றாரிதைப்பார்த்ததில் பணிந்தார் பரவசமாய்
நல்லபாக்கியசாலிகளாகுமென்றார் இதுதானே தில்லைப்பதி,

வசனம்.

நந்தனார் தில்லையைக்கண்ட ஆனந்தானுபூதியைச்சொல்லுகிறார்

கீர்த்தனம்-இ-ம்-தெண்டகம்-ஆதிதாளம்

தில்லைத்தலத்தைக் கண்டார் அதுசித்துவிலாசமென்றார் அந்த
எல்லையிலே நின்றார் மனதேகமாக்கிக்கொண்டார்
இருகண்கள்நீர் வடித்தார் கொடுங்காமாலையறுத்தார்
இருகையைதூக்கி குவித்தார் தன்காலைக்கோணிகுதித்தார் இந்த
ஐம்புலன்களை மறந்தார் பரமானந்தக்கடலுழைந்தார்
தன்தேகபாவ மறந்தார் தில்லைச்சிவனேயென்றிருந்தார்

கீர்த்தனம்-இ-ம்-பியாகு-ஆதிதாளம்

பல்லவி.

இதுதானோ தில்லைத்தலம் இத்தனைநாளுமறியேன்
இதுதானோ தில்லைத்தலம்
அதுவோயிதுவோவென்று அலைந்திடும்பேயனைக்
கதிதருவேனென்று கைகாட்டியழைக்குது
காசினியிலிதைகயிலையென்றெல்லோரும்
பேசக்கேட்டதேயுண்டுபேணிப்பார்த்தறிகிலேன் இது

வசனம்.

நந்தனார் தில்லையைக்கண்டு கொண்டாடுவார்

கீர்த்தனம்-இந்துஸ்தான்-காபிராகம்-ஆதிதாளம்

பல்லவி.

தில்லை தில்லையென்றால் பிறவி இல்லை இல்லையென்றுமறைமொழியும்
தொல்லைதொல்லையென்றகொடுவினை
கல்லைவல்லையென்றகலுந்திருத் தில்லை
கற்றோருங்கற்றோருங்களங்கமறிந்திட
பெற்றோரும்பெற்றோரும்பேசாப்பெருமையி
லுற்றோருமுற்றோருமபொன்னம்பலத்தினில்
தத்தோந்தத்தோமென்றுநடனமிடும் தில்லை
வாடிவாடிமாலயனிரும்
கூடிக்கூடிக்கொண்டல்லும்பகலும்
தேடித்தேடித்திருவடிமுடிகளைப்
பாடிப்பாடிக்கோபாலகிருஷ்ணன்தொழும் தில்லை

க் துகடா-இ-ம்-தேசிகதோடி-ஆதிதாளம்.

பல்லவி,

இதுவோதில்லைச்சிதம்பரட்சேத்திர மீசனிருப்பிடமோ
மதுரம்பொழிந்திடும் மறையோரிருப்பிடம்
மாமுனிவர்தவம் வாழும்பெரியிடம்
பதவிபெறுந்தொண்டர் பணிந்துவருமிடம்
பலதெய்வமுமல்லில் பாடியிதுஞ்சுமிடம் (இது)

கீர்த்தனம்-இ-ம-பியாகு-ரூபகதாளம்,

ஆடுஞ்சிதம்பரமோ-ஐயன்கூத்தாடுஞ்சிதம்பரமோ
ஆடுஞ்சிதம்பரமன்பர்க்களிக்கவே
நாடுஞ்சிதம்பரம்நமச்சிவாயப்பொருள் ஆடுஞ்

ஆறுமறியாமல் அம்பலவாணனார்
சீரடியார்பார்க்கசேவடிதூக்கியே ஆடுஞ்

பாலகிருஷ்ணன்போற்றும்பனுமதிச்சபையினார்
தாளமத்தளம்போடதாதெய்தாதெய்யென்று ஆடுஞ்

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தில்லையைக்கண்டபோதேதெளிந்ததென்னுள்ளமெல்லாம்
பல்லூழிகாலம்செய்தபாழ்வினைதொலைந்துபோச்சு
நல்லருள்தடனங்காக்கும்நாயகனார்சிற்சபைக்குள்
சொல்லுவார்மகிமைசெப்பசேடனாலாகாதன்றே

வசனம்

இப்படியே தில்லையைக்கொண்டாடிதில்லையைப்பாராதவரோ பாவியென்பார்.

கீர்த்தனம்-இ-ம்-சவாயிசாப்புதாளம்.

பல்லவி,

மார்கழிமாதத்திருவாதிரைநாளையில்வந்துசிதம்பரதேசிகனை
பாராதப்பாவிகட்கேதுமில்லையிந்தப்பாரில்வந்துபிறவாதவரோ
வானிற்றெருடுநதிருமாளிகைமண்டபமாமதிலுந்தில்லைமாநகரம் [வே
காணக்கிடைக்காத இந்தபாக்கியங்காதில் கேட்டவண்ணங்கண்டது
யாதிபராபரமாகிய தில்லைப்பொன்னம்பலவாணர்சந்நிதியில்
நாதமுங்கீதமுங்கேட்குதுயானந்தநாடகவேளையைநானறியேன்

வசனம்.

நந்தனார்சிதம்பரங்காணுததனுல்சிவலோகங்காணுரென்பார்

கீர்த்தனம்-இ-ம்-சாவேரி-ரூபகதாளம்.

பல்லவி.

சிதம்பரம்வந்துதெரிசியாதசென்மம்வீணென்றுபேசு
மனதிலெண்ணினார்பாதகமலத்தியானம்பண்ணினார்

பறைபனுக்குமிந்தத்தலத்தைப்பார்த்தபின்புமோட்சபதவி
பலித்தல்லவோபாவிசெனனம்மறுத்துதல்லவோ
தொண்டுகொண்டதங்களையர்பெருமையெல்லாம்சொல்லிசொல்லி
துள்ளித்தாவினார்ஞானவிளையையள்ளித்தூவினார்
பூதலத்தினிலிதுவேதெய்வமென்றுநந்தனானந்தக்கடல்
பொங்கிப்பாடினார்புண்ணியத்தலமென்றுதேடினார்

கீர்த்தனம்-இ-ம்-புன்னாகவராளி-ரூபகதாளம்.

அரகராசங்கரவண்ணமேவம்பலத்தானே
நானுந்தனடைக்கலமென்று

உருகித்துதியாரோவானந்தம
பெருகிப்பதியாரோ

முத்தியளிக்குந்திருமூலத்தானைக்கண்டு
பத்திபண்ணுதவன்பாமரனல்லவோ

பாருக்குச்சுமையாச்சு அவனிருந்தும்
மாருக்குச்சுமாச்சு

மங்கையர்மோகமாய்மயங்கித்தினந்தோறு
மங்களமுங்கிதமாயவரிடுமேவல்

கொண்டழிக்கியுழைத்தாரோ அன்னியமாய்
நாளையுங்கழித்தாரோ

விசனடைநடந்தமெய்யும்பொய்யாகவே
ஓசையடங்கும்போதொருவருமங்கில்லைத்

தாசியும்போகாதேசுகந்தருந்த
வேசியும்வாராதே

சிவசிதம்பரமென்றுதில்லைவெளியினின்று
பவசாகரமென்றுபரமபதமடையுந்

தவகெதிபொருந்தாரோபொருந்திய
மவனையும்வருந்தாரோ

சாத்திரங்கற்றுஞ்சதுர்மறையுணர்ந்தாலும்
ரூத்திரம்பெற்றுஞ்சொன்னென்சயகரா

மாத்திரம்போகாதே கருணைக்குப்
பாத்திரமாகாதே

சரணாகதமென்று சார்ந்தடிபணியாமல்
வருணாஸ்திரம்விதிவழுவாதிருக்கிலுஞ்
சனனதிகள்விடுமோசரவணை
மனனதிகள்படுமோ

அஷ்டசித்திகள்பெற்று ஆண்டாயிரங்காலம்
மட்டிருந்தாலுமென்ன மரணபயனெய்திலா
நஷ்டசென்மமாச்சே மனிதசென்ம
வெட்டிவினைப்போச்சே

முப்பாழுந்தாண்டி மூலத்தீமூட்டிக்கொள்
டப்பாலேநின்றலானந்தங்காணலா
மொப்பாரில்லையடா-ஊடுருகி
நிற்பாரில்லைபடா

ஆளமிட நடக்கியம்பலக்கூத்தன்கோ
பாலகிருஷ்ணன்தொழும் பரமசிவனேயென்று
பாடிப்படியாரோ-பருவத்தில்
தேடிப்பிடியாரோ

## வசனம்

நந்தனார் சிவபத்திபண்ணாதவனை நிந்தனைசெய்து இன்னமுஞ்சொல்லுவார்

### கீர்த்தனம்-இ-ம்-சுருட்டி-சாபுதாளம்

வானோர்புகழுந்தில்லைவனநாதர்வாழுஞ்
ஞானசபையைப்போற்றிநமச்சிவாயவென்று
சொல்லாதவன்-கல்விகல்லாதவன்-வெகுபொல்லாதவன்

காசினிபுகழுசிவகாமவல்லிளைக்கண்டு
பாசமகலுமகெறியாராதவன்சுத்தப்
பேதராசகு-ஆட்டி-னதராச்சு

ஆட்டுக்காலைச்சற்றேகேட்டுவாங்கியுள்ள
நாட்டிக்கொள்ளாதவன்மாட்டுக்குவமையென்று
நாடாரோ-கண்டுகூடாரோ என்றுந்தேடாரோ

அம்பலவாணனாருகில்வந்துகையால்
கும்பிட்டிறைச்சாதகுருடர்களுக்குத்திற
மதியேது-பரகதியேது-பண்ணுபவிதியேது

ஜக்கிருந்துஞ்சிவநாமத்தைநவிலாமல்
சாக்குப்போக்குப்பேசுஞ்சண்டியனைக்கால
னடியானோ-கட்டிப்பிடியானோ-கையாலிடியானோ

வேதாகமநூற்களைவிவரித்துணர்ந்தாலு
மேகாந்தபததிலொன்றில்லாதவனுள்ள
மூருகாது-கள்ளங்கருகாது-வெள்ளம்பெருகாது

ஆத்திமதியுஞ்சடையழகனாடிஅதனைப்
பார்த்துக்களிக்காதபாவிமனிதர்க்கொன்றும்
பலியாது-வினைசலியாது-சினம்பொலியாது

பாலவிஷ்ணன்தேடிர்பாதரசத்தைக்கண்டு
சிலமூடனோயுண்டுசெபிக்காதவன்துன்பம்
துலையாது-இன்பமகிலையாது-கன்மங்கலையாது

வசனம்

சிதம்பரம்பாராதகண்படைத்தானா முகத்தை கெடுக்கவந்த புண் படைத்தானொனறு சொல்லுவார்

கீர்த்தனம்-இ-ம்-ஆனந்தக்களிப்பிலே ஒருபேதம்

காணாதகண்ணென்னகண்ணே
வீணானகண்மயிர்க்கொண்ணதுபுண்ணே — காணாத

சொல்லும்பொருளிறந்தரியவடிவதாகி
யல்லும்பகலுமற்றவானந்தப்பேரொளி — காணாத

பசியாமருந்தளிகரும்பரமரகசியத்தி
லசையாமலேயாடுமம்பலநாதனைக் — காணாத

ஊராருமறியாமலொளிக்கண்டுபிசகாமல்
சாராதுகாற்கொண்டெழுப்பிமண்டபம் — காணாத

அண்டத்துளடங்காதவாசைவலையைப்பூட்டி
பிண்டத்துளடங்கியபேரின்பதெய்வதத்தைக் — காணாத

காசிமடுவிருந்துமதனைதானென்று
பேசாமற்பெருமையைகொருநாளும் — காணாத

என்னையானறியேனென்றிகழ்ந்திடும்பேய்யனை
தன்னந்தனியனுக்கித்தருவினைதழைத்தாலாக் — காணாத

சேர்ந்தருத்திரைச்சமந்திரனுடெலன்ன
ஆத்திமதியுஞ்சடையழகன்மருக்கோயில் (காணாத)

சிலகமலமுகச்சிவகாமிமனமகிழ்
கோலக்கனகன்றில்லைக்குழுனுடியகூத்தைக் (காணாத)

பாலகிருஷ்ணன்றொழும்பாதத்தைதாணிந்தொரு
காணும்மறவாதகல்மிககவழித்தடி (காணாத)

வசனம்.

பத்திபண்ணுதவன் முத்திபெறுனென்று சொல்லுகிறார்

கீர்த்தனம்-இ-ம்-தண்டகம்-ஆதிதாளம்

வேதம்படிக்கதும்சாஸ்திரங்கற்றதும்பொய்யினில்நீறுபூசுவதும்
ஆதிசிதம்பரதேசிகன்றிருவடிக்காளானலன்றுணர்ந்தால
உடனேதுலையும்பவபந்தஞ்சொன்னேன்சொன்னேன் சொன்னேன்

ஊனுறக்கமுதலாகியநான்குமுண்டேயுலகில்யாவருக்கும்
ஆணவமலத்தார்களறிவாரகத்தைச்சகக்கிக்கொள்ளுவரோ
ஜகத்தைப்பொய்யாத்தள்ளுவரேசொன்னேன்சொன்னேன்

அருந்தவமுனியாகிலும்கல்லராசைபொல்லாதறியாரோ
வருந்திபடுத்திடுமனதைமயங்கிலைதறிமண்ணமயங்கோசம்
உற்றுப்பார்த்தாலதுநேசம்சொன்னேன் சொன்னேன்

அரவணைகோபாலகிருஷ்ணனல்லும்பகலும்பணிந்தேற்றும்
திருவடிசரணுகதமென்றெண்ணித்தெளிந்தார்க்கன்றேபரகதி
ஒழிந்தார்க்கன்றேவரமுத்திசொன்னேன்சொன்னேன்

திருநாளைப்போவார்புராணம்

விருத்தம்

இப்பரிசாயிருக்கவெனக்கெய்தலரிதென்றெஞ்சி
யப்பதியின்மதிப்புவத்தினருகமெருங்காத
லெப்பரிதாம்வளர்ந்தோகாதவுள்ளுருகிக்கைதொழுதே
செப்பரியதிருவெல்லைவலங்கொண்டுசொல்லுகின்றார்

வசனம்

இந்தப்பிராமணர்களுடையவீடுகள் இந்தன்மையாயிருக்கனைக்கு
அவ்விடத்திற்குப் போகுத ஒரிதென்று பயந்து அந்த ஸ்தலத்தின்

மகிலின் புறத்தில் அளவற்ற பொன்புசமான மில்லாமல்வளர மனமுரு
கிக்கும்பிட்டுக்கொண்டு சொல்லுதற்கரிய எல்லையைவலஞ்செய்துகொ
ண்டுபோவார்

விருத்தம.

அம்மையார்தில்லைமாநகரி மருங்கிடையணிந்து
சும்மையிற்றிரு விழிகளில்நீர்ச்சொரிந்து
விம்மிமேபசினார்சரிதங்களைவிரித்துக
கொம்மைவிட்டவர் யாடியமானந்தங்கொண்டார்

வசனம்.

நந்தனார் தனக்கிந்தபாக்கியங் கிடைத்ததென்று கொண்டாளடிக்கிறார்.

கீர்த்தனம்-இ-ம்-உசேனி-ரூபகதாளம்

பல்லவி

கொண்டாளடிக்கிறார்தில்லை கோயிலைக்கண்டுதாவித்தாவி கொண்

அண்டரண்டர்தொழும்மம்பலநாதனைக்
கண்டாளைக்கண்டுகொண்டோமென்றுநன்றாய் கொண்

அஞ்சலிகொண்டுகதித்து அரகரவென்றுசெபித்து
குஞ்சிதபாதத்தைத்துதித்துகுரவைநளபாடிக்குதித்து கொண்

அங்கம்பரவசமடாநறு ஆனந்தக்கடலெழுந்து
பொங்கிச்சுசுமென்றறிந்துபுவிபதிர்ந்துபணிமுருந்து கொண்

இருகண்களில்நீர்பெருகஇறைஞ்சிமனதுருக —
அருமைச்சிவன்கதிதருகஅம்பலவாணனைவருக கொண்

இதுவுமது

தரு-இ-ம்-சௌராஷ்டிகபீ-ஆதிதாளம்

பல்லவி.

கொண்டாணடித்தாரேநந்தனார் கோவிலைக்கண்டு
கொண்டாணடித்தாரேநந்தனார்

அநுபல்லவி,

அண்டர்மகிழ்ச்சியாலே அரனேயென்றுமென்மேலே கொண்

சரணங்கள்

பண்டுநாள்செய்ததே யோகம்-அதனாலுநாக்
கொண்டுவந்தேன்மானிட தேகம-ஆகவேயிந்தப்
புண்டரீகப்பதலல போக-கண்டேனென்போல
மண்ணிலெவர்க்குளதிப் போகம்-என்றுதித்தும்

தில்லையைக்கண்டேன்தேறித்தெளிந்தேன்
    எல்லையில்நின்றேனினிப்பிறவேன்காண்
எனக்கினிபாரீடு கரும்புபோ லினிக்குதுபார்வீடு
    ஆசாபாசத்தைவேறறவெட்டு மானந்தத்தின்மூழ்க்காட்டி
வைக்கமிதுயாருக்குங்கிடையாது இந்தசுகம்யாருக்குளினையேது
    சரணாகதனென்றிவகேவந்தேன சாமிபராக்கு
உமையடைந்தேன்ஜெனனகிளான்மிகநொந்தேன்
    வேறொருதெய்வங்களைவருந்தேன் ஜெய

தென்றிசைகோன்வந்தழைத்திடும்வேளையில்
    பெண்டுபிள்ளைகள்குண்றோட்டம்
ஊ த்திலேறியபெருங்கூட்டம்
    காணும்சமனுந்திண்டாட்டம்ஓருசப்பிக்கைதாரும்
நானுனக்கருள்புரிந்தாளுவனென்று
    கனவிலாகிலும்வாருந்த டியெழுப்பிக்கவலைகள்தீரும்
அடிமையென்றுமானதுமகிழ்ந்துபாரும்
    தில்லைவெளியில்வாரும் திரும்பவேசேரும்-ஜெய் ஜெய

அரகாசங்கரனேபொன்னம்பலத்தாண்டவனே
    பரமதயாமூர்த்தியென்றடிபணிந்தேன் மனங்கலிந்தேன்
சாதியில்சின்னவனானல்மூன்று வீதியில்வந்தேனாகாதோ
    பாதகஞ்செய்யினுஞ்சிதம்பரமென்று
பகர்ந்தால்பழவினைபோகாதோ
    தீதில்லாதபெருந்தவத்தோர்வந்தால்
தெரிசனஞ்செய்தேன்போதாதோ
    ஆதிபராபரமாகியவனைக்கொண்டாடுவேன்
பாடுவேன்தேடுவேன்னாடுவேன் ஜெய

    அபசாரமாகியசமுசாரம்சரதரவிஷ்யகாமதிக்காரம்
உபாயமறிந்துக்காயேறப்படாதுசெகதீசுரமாயா
    விலாசகற்பிதமிந்தசெகம் அநேகசஞ்சிதவாசனைகள்
சிவலோகமென்கிறபாவனையால்நிவாரணம்பெரியோர்கள்
    பண்ணியதொழிலிற் பயநகிவார் பாலகிருஷ்ணன்றொழுங்கழலணி
எண்ணியபடிபேதவமூறுவாரெனதுனதென்னுமுறைமைபிடுவார்
    சமாதிபண்ணிய கம்மாதிக்கிருந்தியடாதே பேதகைவிட்டாதேயும் கீ
சபாபதிவெகுகிருபாநிதியுன்
    பிரதாபமறியேன் சுபாவப்புலையன் ஜெய

சரணங்கள்.

சீரகெண்டையர்சிலம்பசைந்திட மேவுஞ்சடையம்புலியசைந்தி
டாருந்தொண்டர்யாமனங்கவிந்திடசாலோகாதிபதவியுந்
தந்தோந்தந்தோமென்று ஆடிய

வேதமுனிவர்கள்பாடவுஞ்சனகாதிபோதிகள்
வெகுநாதமெங்கினுமூடவுந்திருநந்திமத்தளம்போடவுந்
தகுந்தகுந்தகுந்தகுமென ஆடிய

பாலகிருஷ்ணன்துதிகள்செய்திடப்பண்ணவர்கள் பூமாரிபெய்திட
சிலமுள்ளசிவகாமிமகிழ்ந்திடதிருச்சிற்றம்பலத்தாசனுந்
தாந்தாந்தாந்தாந்தாமென்று ஆடிய

வசனம்

நந்தனார் அடிமைத்திறங்காட்டிச்சொல்லுகிறார்

கீர்த்தனம்-இ-ம்-தெண்டகம்-ஆதிதாளம்

அறிந்தறியாமலேசெய்தஅபராதமையா என்னை
ஆண்டவனேதில்லைத்தாண்டவங்கள்மடந்திடமத்தாவுன்சரணம்
பருகியவண்பெகிரண்டவராயா அடிமைவுன்சரணம்

நடுயுராதியுமந்தமுமென்றுமிலாதமிராமனேசரணம்
பொங்குமானந்தக்கடலேவெளியேயறிவின்னறிவேயுன்சரணம்

என்றும்நிகளசிற்குணரூபாவுன்சரணம்
சுருதியின்மகிமைகண்டதோரியாதுளவரியேனுன்சரணம்

என்னுக்குளெண்ணெய்போலெங்குமகண்டமதாகுமீசாவுன்சரணம்
யானைவெட்டிகண்டெறியாதவன்சுமுகாபேசாவுன்சரணம்

வசனம்

இப்படியனேகவிதமாய்கொண்டாடி உட்புகுந்து தாண்டவம்பா
ராத குறைகொண்டு சுவாமியை நானுள்ளே வரலாமோவென்று கே
ட்கிறார்

கீர்த்தனம்-இ-ம் மாஞ்சை-ரூபகதாளம்

பல்லவி

வருகலாமோவையாஉந்தனருகில்நின்றுகொண்டாடவுநான்
பரமகிருபாநிதியல்லவோஇந்தப்பறையனுயசாருஞ்சொல்லவோ
உந்தன்பரமானந்தத்தாண்டவப்பார்க்கவே தானங்கே வருகலா

பூமியில்புலையனாகப் பிறந்தேனே-நான்
புண்ணியஞ்செய்யாம லிருந்தேனே
சாமியுன்சந்நிதி வந்தேனே-பவ
சாகரத்தையு மிழந்தேனே
கரை-கடந்தேனே-சரண மடைந்தேனே-தில்லை
வாதாப்பிரதாபமும்பாபமுந் திரவே (வரு)

வசனம்,

இப்படித்திருநாளைப்போவாரென்னும் கீர்த்திபெற்ற நந்தனார் தில்லையில்வந்து கொண்டாடும் பத்திமார்க்கத்தை ஆதிசேடனாலும் வருணித்துச்சொல்லப்படாத ஞானபத்திவைராக்கிய சாத்திரங்கள் குடியிருக்கும்ஊரின்பேர்சொல்லக்கேட்டறியாத பேதையாகிய கோபாலகிருஷ்ணனென்னும்பெயர்கொண்டயென்னால்சொல்லத்தகுமா வதோ நான் உளரிக்கூரியதால் பெரியோர்கள் பிழைபொறுக்கக்கடமையென்று சொல்லிவணங்குகிறார்.

சிந்து.

இதுதானோதில்லைப்பதி-என்று-எக்கலித்தா ராடிக்கெக்கலித்தார் ஐயாவுன்சந்நிதியைக்-காண-ஆசைகொண்டுவந்தேன் நேசமுடன் தெருவில்பொடித்தூளை அள்ளித் தேகமுழுதினுந் தாகமுடன்தரித்தார் திருநீறாய் நாலுசாத்திரவேதங்கள் பார்த்துணரும் பெரியோரிருக்குமிடம்.

வசனம்.

நந்தனார் அந்தத்தில்லைத்தலம் இப்படி யிருக்குதென்று சொல்லுகிறார்.

கீர்த்தனம்-இ-ம்-செந்தகடுக்கா ஆதிதாளம்.

தண்டகம்.

ஆகமங்கள்வேதியர்கள்சிவ னடியார்கள்கூட்டம் நம
தேகமாகியப்போதுவிளைகின்ற யோகிமுனிகணட்டம் பூ
லோககைலாசமென்றுமிதைப் போற்றுவார்களாட்டம்அதி
வேகயாகவெங்கேயாகிலும் வெளியேபோகவேணுமையே
இங்கிருக்கலாகாதையே இங்கிருக்கலாகாதையே
பூாவிப்பறையனிங்கேவரலாமோ சுவாமிதரிசனந்தரலாமோ

பாதகமலங்களைத் தொடப்போமோ
பாவமென்னைப்பிரிந்து தொலைபோமோ
இங்கேஆகாதாகா தையே
வேள்விசெய்யும்புகைமேலுலக மெழும்பிப்போகுதையே
புண்ணியவான்கள்புரியுந்தவம்
அரகரசிவவென்று ஆடிப்பாடிக்கொண்டு
பரிவுடனரனைப்பிரதட்சணம்வரும்மி ம் ஆகாதாகாதையே
மணியாடுது-வெகுசனங்கூடுது-வீதிவலமாகுது திருப்பதம்பாடுது
உள்ளேநடமாடுது-பணிவிடைபோகுது-பரவசமாகுது
மெத்தப்பயமாகுது-இங்கே ஆகாதாகாதையே
தீண்டாதே-இங்கே-வேண்டாதேசும்மா இரையாதேஇங்கேதரியாதே
என்னைப்பாராதே-படியேறாதே-உள்ளே-போகாதேவர லாகாதே
யென்பார்-ஆகாதாகா தையே

சிந்து

பெரியோரிருக்குமிடம்-இந்தப்-பேயனிருப்பதுஞாயமல்ல
நானுபறைச்சாதி-தில்லை-நாதன்தெரிசனமாதரவாய்
பண்ணுப்படுபாவி-இந்தப்-பாரிலிருப்பதுசீரலவே
என்றேகுளத்தோரம்-புக்கி-எங்கிநின்றார் துயர்நீங்கிநின்றார்
ஓயாப்பெருங்கவலைகொண்டு-உள்ளங்குழைந்திட வெள்ளமெனக்
கண்ணீர்கரைபுரள-இரு-கைதொழுதாரவர்மெய்தொழுதார்
கீழேபுரண்டழுதார்

திருநாளைப்போவார்புராணம்.

விருத்தம்.

செல்கின்றபோதந்தத்திருவெல்லைபணிந்தெழுந்து
பல்குஞ்செந்தீவளர்த்தபயில்வேள்வியெழுபுகையு
மல்குபெருங்கிடையோதுங்கிடைங்களுநெருங்கினவுங்கண்
டல்குந்தங்குலநினைந்தேயஞ்சியிடைந்திவர்நின்றார்

வசனம்.

திருநாளைப்போவார் சிதம்பரத்துக்குப்போனபொழுது அதின் எல்லையைக்கண்டுநமஸ்கரித்து எழுந்து விருத்தியாகச் சிவந்த அக்கினியைவளர்த்து ஆகுதிசெய்கின்ற யாகத்தால் உண்டாகியபுகையும் மிகுந்த பிராமணப்பிள்ளைகளின் நான்குவேதங்களை ஓதும்படியாக அடிக்கடி நெருங்கியிருக்கும் மடல்களையுங்கண்டு குறைவாகித் தம்முடைய குலத்தைநினைந்து உள்ளேபோவதற்குப் பயந்துபோகாமல் நின்றுவிட்டார்,

## இதுவுமது-விருத்தம்.

நின்றவரங்கெய்தரியபெருமையினைநினைப்பார்முன்
சென்றவையுங்கடந்தார்சூழெயிற்றிருவாயிலைப்புக்கார்
குன்றனையமாளிகைகடொறுங்குலவும்வேதிகைக
ளொன்றியமூவாயிரமங்குளவென்டாராகுதிகள்

### வசனம்,

எல்லையில்நின்றுக்கொண்டிருந்த திருநாளைப்போவார்நான்உள்ளேயடையக்கூடாதஅக்கோயிலின்பெருமையைநினைப்பாராகி முதலின்அந்தஎல்லையைக்கடந்துஊரைச்சுற்றியிருக்கும் மதிலின்திருவாசலையடைந்தார் அங்கேதிண்ணைகள்பொருந்திய மலைகள்போலுயர்ந்த மூவாயிரம் வீடுகள்தோறும் ஓமங்கள் செய்யப்படுகின்றவென்று சொல்லிக்கொள்ளுவார் சுவாமியைபூசிக்கிற தில்லைமூவாயிரவர்களுடைய வீடுகள் மாளிகைகள் மூவாயிரமென்றார்வேதவிதிப்படியாகுதிசெய்யும்பிராமணர்களுடையவீதியிலே நாம்போகக்கூடாதபடியால் அதைநினைந்துதன்குலத்தையிகழ்ந்துஇருக்கலாகாதென்று அவ்விடம்விட்டொருகுளத்தருகில்வந்துசுவாமியைப்பாரதசென்மமென்படைத்தேனென்று தாழப்புரண்டழுவார்,

### கீர்த்தனம்-இ-ம்-சரசாங்கி-ரூபகதாளம்.

### பல்லவி

இந்தச்சடலம்வந்தவாறேதென்றறிகிலேன்-யானேதென்றறிகிலேன்

### அநுபல்லவி.

சந்ததமும்தில்லை யம்பலத்தானை
சிந்தித்துமாயச் சிணுக்கறுக்காமல்                                இந்தச்

### சரணங்கள்,

அங்கமலங்களைப் போக்கியேசிவ
கங்கையிலாடிக்களங்கமறாமல்                                இந்தச்

ஆடும்நடனங்கண்டானந்தமாகிப்
பாடிப்படித்துப்பணிந்துகொள்ளாமல்                                இந்தச்

அஞ்சக்கரத்தையெடுத்துருவேற்றி
வஞ்சப்பிறவிமயக்கறுக்காமல்                                இந்தச்

பாலகிருஷ்ணன்தொழும்பாதத்தைக்கும்பிட்டு
சீலமுள்ளமுத்திசித்திபெறாமல்                                இந்தச்

கீர்த்தனம்-இ-ம்-தந்யாசி-ஆதிதாளம்

பல்லவி

கனகசபாபதிதரிசனம்ஒருநாள் கண்டால்கலிதீரும்

அநுபல்லவி.

ஜனகமகாமுனிகைதொழுநித்தியதினகரகோடிதேஜோன்மயமாகிய

சரணங்கள்.

மனதிலொடுங்கிய கல்மிஷம்போக்கும்
மாயபபிறப்பறுத்து மறுவடியாக்கும்
ஜனனமரணசமு சாரத்தைநீக்கும்
திருவடிநிழலிலே கூட்டியேகாக்கும் கனக
சுருதிமுடிவுகளில் சொல்லிக்கொண்டாடும்
துய்யவெளியையொளி யாகவேகூடும
தருமமேறியுந்தவ ருதுளநாடும்
ததிங்கணத்தோமென்று தாண்டவமாடும் கனக
பற்பலயோசனை செய்வதுந்தொல்லை
பரகதியடையவு பாடமுமில்லை
அற்புதமாகவே தானொருசொல்லை
அணியுங்கோபாலகிருஷ்ணன் பணியுந்தில்லை கனக

கீர்த்தனம்-இ-ம்-கரகரப்பிரியை-சாப்புதாளம்.

பல்லவி,

கட்டைகடைத்தேறவேணுமே கனகசபாபதிநடனங்
கண்டுகளிக்கவந்தஇந்தநந்தனுர் கட்டை
கட்டைகடைத்தேறவொட்டுமோசென்மம்
கெட்டதல்லவோ இஷ்டமறியேன் கட்டை
முத்தியிலளிக்கும்பத்தியிலென்ன
சிற்றம்பலவன்சித்தமறியேன் கட்டை

வசனம்,

தேகம் படைத்தால் சிவபத்தி பண்ணவேணுமென்று நந்தனு சொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம் தண்டகம்-ரூபகதாளம்,

தேகம்வந்தவாறுசொல்லவோ சிதம்பரேசனடியைத்
தினமுந்தொழுதிருப்பதற்கல்லவோ
இந்தவிஷயசுகத்தை நாடுமோ பாவிமனக்குரங்
கிருப்பிடங்காணம லோடுமோ
தில்லைத்தலத்தைக் கண்டிமாச்சுதே உள்ளேசென்றுநடன
தெரிசனம்பண்ணமல் போச்சுதே

பறையனென்றசென்மம் போகுமோபாழ் வினையாலின்னம்
பாரில்வந்துபிறக்க லாகுமோ
அடிமையென்றுவந்தே னுய்யுமோஒன்றையுமானறியே
னம்பலத்தெய்வமென்னசெய்யுமோ
பார்த்ததெல்லாமழிந்துதோணுமோ கோபாலகிருஷ்ணன்
பணியும்பரமசிவன் கருணைவேணுமே

வசனம்.

சிதம்பரதெரிசனங் கண்டபேர்க்கு சென்மம் இல்லையென்பார்.

கீர்த்தனம்-இ-ம்-ரூபகதாளம்.

பல்லவி.

தெரிசனங்கண்டபேர்க்கு சென்மம் இல்லையென்பார்

அநுபல்லவி,

தெரிசனங்கண்டவர்க்குமறுசென்ம மில்லை
வரிசையுடனம்பலவன்வாழ்கின்ற தில்லை தெரி

சரணங்கள்.

இரவுபகலிடைவிடாதேகாச பத்தி
இன்பமுறுமானந்தம்பொங்கும் நத்தி
பரவிவருமரனருளாலணிமாதி சித்தி
பணிந்துவந்துசிற்றம்பலத்தைவலஞ் சுத்தி தெரி
சொர்ப்பமென்றிவ்வுலகம்தோன்றிவரும் வேதம்
சொன்னததுநின்றபடியாகும் போதம்
அற்புதமிதங்கமொடுதாளவகை கீதம்
அனவரதத்திருநடனமாடிவரும் பாதம் தெரி
அல்லும்பகலோயாது அடியார்கள் கோஷ்டி
அரகராவெனறமிர்தபானமதை கூட்டி
தில்லைவாழந்தணர்கள்கைபிடித்துக் காட்டி
சிக்கெனவேதிரைதிறந்துபரவெளியைக் காட்டி தெரி
நஞ்சுண்டகண்டனுக்குக்கொன்றைமலர் சாற்றி
நல்லதிருச்சாந்தணிஅம்பிகையைப் போற்றி
குஞ்சிதபதந்தமதுமனதிலூற வேற்றிக்
கோபால்கிருஷ்ணன்தொழும்நடராஜ மூர்த்தி தெரி

வசனம்,

தனக்கு தெரிசனங்கொடுக்க அம்பலவாணர் எப்போது வரு
வாரோவென்று விசாரப்படுவார்.

கீர்த்தனம்-இ-ம்-செஞ்சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

எப்போவருவாரோ-எந்தன்கலிதீர-எப்போவருவாரோ
எப்போவருவாரோ எந்தன்கலிதீரச்
செப்பியதில்லைச்சிதம்பரதேவர் எப்போ
நற்பருவம்வந்துநாதனைத்தேடும்
கற்பனைகள்முற்றக்காட்சிதந்தாள் எப்போ
அற்பசுகவாழ்விலானந்தங்கொண்டேன்
பொற்பதத்தைக்காணேன்பொன்னம்பலவாணன் எப்போ
பாலகிருஷ்ணன்போற்றிப்பணிந்திடுமீசன்
மேலேகாதல்கொண்டேன்வெளிப்படக்காணேன் எப்போ

கீர்த்தனம்-இ-ம்-செஞ்சுருட்டி-ஆதிதாளம்,

வருவாரோ அருள்புரிவாரோ எந்தன்
மனதுசலிக்குதுநானென்னசெய்வேன்
அரகரசங்கரனம்பலவாணன்
ஆதரிக்காதிருப்பாரோ ஒருக்கால் வருவா

வசனம்.

நான் சின்னஜாதியானதால் வருவாரோ வாராரோவென்றுஞ் சஞ்சலப்படுவார்,

கீர்த்தனம்-இ-ம்-சுருட்டி-ஆதிதாளம்

பல்லவி.

பாராமலிருப்பாரோ ஒருக்கால் வருவாரோவடியேன்
பாராமலிருப்பாரோ பதஞ்சலிமுனிக்குப்
பாதங்கொடுத்தாசனுனென்று வாராம
கனவினில்வந்துகழனிமுழுதும்நட்டு
மனதுமகிழ்ந்துயென்னைவாவென்றுசொன்னவர் வாராம
களங்கமறவே அவர்காலுக்குக்கும்பிட்டு
குளத்தங்கரையில்நின்றுகூப்பிடும்வேளையில் வாராம
அல்லலறுத்துப்பரமானந்தமேதரும்
தில்லைத்தலத்தைக்கண்டுதெரிசனம்பண்ணியும் வாராம

வசனம்,.

இதுவரையில்வராதபடியினலஇனிமேல்தில்லைத்தலத்தைவிடாமல்சுற்றிவந்துதேகத்தைத்தள்ளுவோமென்று நிச்சயம்பண்ணுவார்

கீர்த்தனம்-இ-ம்-செஞ்சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி

இன்னம்வரக்காண்கிலேன் என்செய்குவேனவர் இன்னம்
இன்னம்வரக்காணலேன் தில்லைபொன்னம்பலவாணன் பண்ணையும்
நட்டென்னையுமிங்கேவாவென்றுசொன்னவர்மறந்தாரோ இன்னம்
சொல்லும்பொருளுமிந்தச்சோதியேமகிழ்ந்துவாழும்
தில்லையைவிடாமற்சுற்றித்தேகத்தைமாற்றிக்கொள்வதுநல்லதுஇன்
பாலகிருஷ்ணன்போற்றும்பாதச்சிலம்புகுலுங்கக்கோலமுடனடனங்
கண்டேன்குறைகள்தீர்ந்ததென்றுசொல்லவுந்தான் இன்னம்

வசனம்,

இப்படிசொல்லிக்கொண்டு கண்ணீர்சொரிந்துபுரண்டழுதார்

சிந்து.

கீழேபுரண்டழுவார் ஒன்றும் கேள்விமுறையில்லையோநாதா
வென்றேதலைகுனிந்தார் எந்தன்வேதனையைக்கண்டு ஆதரிக்கும்
தெய்வங்கிடையாதோ-பாவி-சித்தந்தெளியவிரக்கிதந்து
வீரவென்றழையாதோ விண்ணில் வானவர்கள்போற்று மோனமிலாக்
கனகசபைநடனங்கண்டு காயங்களித்திடநாமடியேன்
வருந்தித்துதியேனோ எந்தன் வாணாளுநகுதுவீணனேபே
அடடாஇதென்னஜென்மம்

வசனம்.

இப்படிபுரண்டழுதுதான்படுகிறதுன்பத்தைக்கண்டு ஆதரிக்கும்படியானதெய்வம்எங்குங்கிடையாதோவென்றும் இருந்தால்வந்து என்னையாதரிக்காதாவென்றும்என்மனதுகுளிர ஒருவார்த்தைசொல்லாதாவென்றும் மேலாகிய தேவர்கள்போற்றும்படியானவனே என்னுடையதோத்திரத்துக்கிரங்கிவரக்கூடாதாவென்றும் உனதுநடனசபைக்குஎன்னையழைத்துப்போய்க்காட்டிஎன்னுடைய இழிவானகுலத்தை மாற்றக்கூடாதோவென்றும் இப்படிப்பற்பலவாறாகப்பணிந்து துன்பசாகரத்திலாழ்ந்தார்.

விருத்தம்.

சாதிபேதமுங்குணக்குறியாவையுந்தள்ளி
ஆதியாதியென்றகற்றினேன்றிசைதனிலணைந்தும்
மாதவம்புரிதொண்டர்கள்பணிதிரண்மறைக்கத்
கோதிலாவுருக்கொண்டிப்பாவிக்குக்குறையோ

வசனம்.

இப்படி சாரதமென்று உன்னைநம்பிவந்து துன்பப்படலாமாசிவனே சிவனேயென்று பெருங்குரலிட்டு தனக்குச் செனமம்போதும் போதுமென்று சொல்லுவார்,

கீர்த்தனம்-இ-ம-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

போதும்போதுமையா எடுத்தசென்மம் போதும்போதுமையா

அநுபல்லவி.

மாதவமாரனைவர்கள்புகழுந்தில்லை
வளர்த்திலனுதினமும்வளரும்பலவாணா — போது

சரணங்கள்,

கோத்துநெளியும்புழுவுக்தைநரம்புகளும்
நாத்தமலங்களுமூத்திரக்தும்பி — போது
சந்ததமுமடியேன் யெந்திரம்போலே
வந்தெழுமவளையிலும்நொந்துமிருந்தேன் — போது
கொழுத்தவாணிகள் போலேயிருந்துவிரும்புமென்னை
வயிற்றிலிருந்துபடும்வருத்தமென்னசொல்வேன் — போது
மாதர்கள்மீதினில்மயல்கொண்டோங்கிடும்
வேதனைகொண்டவெறும்பபலானேன் — போது
அண்ணல்கோபாலகிருஷ்ணன்பணியுந்திரு
அம்பலமேவுமபொன்னம்பலவாணா — போது

வசனம்.

சென்மமேகஷ்டம் அதிலும் புலையனாகப்பிறப்பது மிகவும்கஷ்டம் என்று நந்தனார் சொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-கரகரப்பிரியை-ரூபகதாளம்.

பல்லவி;

இந்தஜென்மம்வேண்டாம் இனிஎந்தஜென்மம்வந்தாலும்வரட்டும்இ

மந்திரடுவினில்மந்திரங்கள்சொல்லி
வாதனைகள்செய்துசினைதமகிழ்ந்த இந்த

வேதமறிந்தவர்பாதபணிநதவர்
போதமடைந்திடாததீகடைந்தேன்பாவி இந்த

பாவிப்பறையாநீ தூரவிலகென்று
ஆவிதவித்திடப்பாரிலுனாததிடும் இந்த

கீர்த்தனம்-இ-ம்-ஆகிரி-ரூபகதாளம்

பல்லவி

தில்லைவலஞ்சுற்றினார்-சிதம்பாத-தெல்லைவலஞ்சுற்றினார்

அநுபல்லவி

தில்லைவலஞ்சுற்றினார் சேரருமறியாத
எல்லைவாசல்கடந்திருளறவேண்டி. தில்லை

சரணங்கள்.

சாதிதுறையைத்தானேசந்ததமுநினைந்து
வேதனைகொண்டுள்ளம்வெதும்பியேவாடி
பாதிப்பிறையணியும்பரமசிவனைக்கண்டு
போதமடைந்துபரிபூரணமாக தில்லை

மோகவலைக்குட்சிக்கிமுழுமூடனாகவே
போகமேசிலையென்றுபுத்திகெட்டேனே
பாகனைவேண்டிடல்பரவசமாகியே
ஏகாரதிற்றன்னைவிருந்திட்டுச்சுகிக்க தில்லை

ஓராறுதாண்டியே யுண்மணிகோட்டைகள்
சீராறுகாணுதசிதபரரகசியம்
ஈராறுநாள்கொண்டு இருக்கப்புலன்றனையும்
பேராறுபெருகியேபெருவெளிகாண தில்லை

வசனம்

இப்படித் தில்லைத்தலத்தை விடாமல் சுற்றிவந்தால் தன்னிடம் சு
வாமிவருவாரென்றும் நினைதைப் பார்க்கச்சொல்லுகிறார்

வசனம்

இந்தப்பிரகாரம் இராப்பகலாக வளர்வந்துகொண்டு உள்ளேபோக்கூடாத தன்மையைநினைத்து வருத்தப்பட்ட உயர்வுபொருந்திய அடியவாவேசாறிகதியசிறமுள்ள கழூந்திணையுடைய சுவாமி கனகசபையில் ஆடுகின்றகூத்தை எப்படிதரிசிக்கலாமென்று விசனத்தோடும் நித்திரைசெய்வார் இப்படிநித்திரைசெய்து மறுபடியும் எழுந்துசொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-சண்டபியாகு-ஆதிதாளம்

பல்லவி

விருதாச்சென்மமாச்சே-வந்தும்-விருதாச்சென்மமாச்சே
சதாகாலமுமையான்சந்நிதானத்திலிருந்துமிதானம்பெறுமல் விரு
முத்தியளித்திடுமூர்த்தியைக்கண்டு
பத்தியைப்பண்ணிபதமடையாமல் விரு
பொற்கழலசையபொதுவிலிருநது
நக்காரும்பதந்தன்னைப்பாராமல் விரு
தில்லைகநிபதிதெரிசனகொடுத்து
எல்லையில்லாவெளிரிரங்கியழைத்தும் விரு

வசனம்

தனதுபதவிக்கு யோக்கியனல்லவென்று தள்ளுவாரோ கொள்ளுவாரோ அப்படிதள்ளினும் தில்லையிலேதானே என்தேகத்தை விடுவதேயன்றி திரும்பிப்போகமாட்டேனென்று சொல்லிப்புலம்புகிறார்,

கீர்த்தனம்-இ-ம்-புன்னாகவராளி-ரூபகதாளம்

பல்லவி

தள்ளுவாரோ-எந்தனைக்கைக்-கொள்ளுவாரோ
தள்ளிவிட்டால்நான்போகேன் சனித்திருக்குஞ்சபையபல்ல
அள்ளிவிட்டென்னன்னை அம்பலவாணனொருக்கால் தள்
எனதெனதென்றபிமானமிச்சையறும்நிஷ்டைபண்ணி
மனமிறந்தவெளியில்மருவாதபாவியென்று தள்
நாறுமிந்தப்பொய்யுடலைகாணென்றெண்ணக்காண்சுமந்து
தூறுபட்டதுன்பமெல்லாந்துலைந்துநீதன்றுஇங்கேவந்தும் தள்
பாலகிருஷ்ணன்தேடிவருந்பாதமலர்நான்காணேன்
வேல்விழியார்மோகங்கொண்டுகீர்த்தியற்றமூடனென்று தள்

சிந்து

"அடடா இதென்னசென்மம்-எம்பூ; அத்தனாதியெல்லைசுற்றிவர்தா"
இரவுபகலோயார்-இமை-ஈசன்கண்டுவிசுவாசமுடன்-பாலகிருஷ்ணனெ
ணியும்-திருப்-பாதமுள்ளதில்லைநாதனவன்-கனவிலுருவாகி

திருநாளைப்போவார்புராணம

விருத்தம

இன்னல்தருமிருபிறவி இதுகடையென்றேதுயில்வா
ரன்னிலையயமயலத்து ளாடுவாரறிந்தினிதில்
மன்னுதிருத்தொண்டரவர் வருத்தமெல்லாந்தீர்ப்பதற்கு
முன்னணைந்துகனவின்கண் முறுவலொடுமருள்செய்வார்

வசனம்

இப்படித் திருநாளைப்போவாரென்னும்நந்தனார் இரவுபகலோயா மல் தில்லைத்தலத்தைச்சுற்றிவருவதால் தேகவருந்தமடைந்து ஒருந்தக திலால் மயங்கிச்சோர்ந்து நித்திரையடைந்தார் அந்தநித்திரையிலே நட ராஜமூர்த்திவந்து காட்சிதந்துசொல்லுவார் எனக்குமிகவும் பிரியமு ள்ள நந்தனோ உமிடத்தில்நமமுடையபத்தர்களாகிய வேதிாளை வ ரச்சொல்லுவோம் அவர்கள்முன்னே அக்கினிபிரவேசமாகி யெழுந்து முறைபடித்து வேதியர்களுடனே சபாப்பிரவேசம்பண்ணுமென் றுரை பகர்ந்து ஐயன் அந்தரத்தியானமானார் நந்தனார் கனவில் காட்சியான தைக்கண்டுகளித்து விழித்துதெளிந்து அளவில்லாத சந்தோஷங்கொ ண்டு நன்றியறிந்துசுவாமிஸ்யத்தோத்திரப்புரிந்து சொல்லுவார்

கீர்த்தனம்-இ-ப்-தண்டகம்-ஆதிதாளம்

பல்லவி

சந்நிதிவரலாமோ-சுவாமி-தெரிசனந்தரலாமோ சந்நிதி

இல்லறவாழ்வாம் பனிமூடி.
இருந்தேனன்றே மிகவாடி.
அல்லும்பகலும் கொண்டாடி.
அறியேன்கனக சபைநாடி சந்நிதி
விதிபிச்சைசற்றே வந்திருந்தேன்
வேடிக்கைபார்த்துக்கொண் டிருந்தே
சாதிபிறந்ததவனென் றறிந்தேன்
தனித்திருப்போமென்றிங்கே வந்தேன் சந்நிதி

காலால்வீசிக்கனல் மூட்டி
கலைமதிமண்டலமே லோட்டி
பாலாறுபெருகவேயெனைக் கூட்டி
பார்த்ததுமில்லைநான் தோட்டி சந்நிதி

வசனம்

நந்தனார் தான்கண்ட சொற்பனத்தைக் கொண்டாடுவார்
கீர்த்தனம்-ஜி-ம-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்

பல்லவி

சொற்பனங்கண்டுகொண்டேன்-அதிசயமாயச்
சொற்பனங்கண்டுகொண்டேன்

அநுபல்லவி

சொற்பனங்கண்டுகொண்டேன்-எல்லாந்-தற்பிழையென்றறிந்தேன்
வேத-தற்பதவாக்கியமே-யுருவாகி-யற்புதநடம்புரியஇன்று சொ

சரணங்கள்

அம்பிகைமணவாளன்-மான்மழு-வணிந்திடுஞ்செந்தோளன்-செம்
பொன்னம்பலத்தனி-தாளமத்தளம்-போட மறைகள் பாடகொண்டாட
மண்டலதிதோராசை-தீர்ந்து-மண்டபமணியோசை-நேர்ந்து
மனதுகனிந்துருக-கறலிகருக-வரந்தருக-வருக சொ
மங்கையர்போகமில்லாதானாயும் வருந்தியழைக்கும்பொல்லாதாகிய
மாயப்பிணியைவெல்ல-மருந்துசொல்ல-வழியிற்செல்லகல்ல
பண்ணவர்முரசடிக்க-பதஞ்சலி-வியாக்கிரமபாதந்துதிக்க - மாயன்கோ
பாலகிருஷ்ணன்களிக்க-உடுக்கையெடுக்க-உலகந்துறக்க-சிறக்க சொ

நந்தனார் தான்கண்ட கனவு நிசமோபொய்யோவென்று சந்தேகப்படுவார்

கீர்த்தனம்-ஜி-ம-சூரியகாந்தம்-சாப்புதாளம்

கனவோநினைவோகண்டதறியேனே
மனதிலுறுதிகொள்ளவழியொன்றுங்காணேன் கனவோ
சித்திசாதனிலொருசித்தனுருவாய்வந்து
முத்திதருவேனென்றுரைத்திட்டேசினதுண்டு கனவோ
ஆருமிகழ்ந்துதள்ளுநோறும்புலையனென்னை
வாரும்பரமபதஞ்சேருமென்றழைத்தது கனவோ
கிட்டநெருங்கிவந்துதட்டியெழுப்பியொரு
வெட்டவெளியைக்காட்டிகட்டளையிட்டது கனவோ

வசனம்

தான்கனவில்கண்டதுபோல சாமிவருவாரோவாராரோ வென்று சஞ்சலப்படுவார்

கீர்த்தனம்-இ-ம்-சாமாராகம்-ஆதிதாளம்.

பல்லவி

வருவாரோவரந்தருவாரோ-எந்தன்
மனதுசஞ்சலிக்குதையோ-எப்போ வருவா

திருவாருந்தென்புலியூர் திருச்சிற்றம்பலவாணன்
குருநாதனுகவந்துஎந்தன்குறைதீர்க்கக்கனவுகண்டேன்
இருவினைப்பிணிகளுக்கருவறுத்திடுகிறேன்
பயப்படாதேயென்றுசொல்ல வருவா

மறைநாலும்வழுத்தரியாமகிமைபெருநடராஜன்
கறையுறுஞ்சேவடியைநம்பினவனுனல்லவோ
அறுநிலைஞ்சிவசிதம்பரமென்ற
வடிவையேற்கருள்புரிந்திடயிங்கே வருவா

மணிமார்பனுசெஞ்சடையும்பார்க்கவெகுபாலாகினைன்
பணியுங்கோபாலகிருஷ்ணனிடம்பரமதயாநிதியல்லவோ
பவக்கடலடிக்கடிபெருகுதிநிலைக்குமோ
மலைக்குதுமனையேற்ற வருவா

வசனம்

நந்தனர் இப்படி அனேகவிதமாய் வருவாரோவாராரோ வென்று பலவிதமாகக் கொண்டாடுகிறார்

திருநாளைப்போவார்புராணம்

விருத்தம்

இப்பிறவிபோய்நீங்க வெரியினிடைமூழ்கி
முப்புரிநூன்மார்பருடன்முன்னைவாவெனமொழிந்த
வப்பரிசேதில்லைவாழந்தணர்க்குமெரியமைக்க
மெய்ப்பொருளானருமருளியம்பலத்தேமேவினர்

வசனம்

நந்தனர் கனவிலேவந்துசொல்லிய நடராஜமூர்த்தி தில்லைமூவாயிரம்பேர்கள் கனவிலேசொல்லுவார் பக்தர்களே எனக்குமிகவும் பிரியமுள்ளவனுகிய திருநாளைப்போவாரென்னும் அழகாகியநாமத்தைக்கொண்டு என்னைக்காணவேண்டுமென்று தன்னைக்காணிக்கைகொண்டு சாகிஷற்றுழ்ந்தவனென்று மிகவுங்குழைந்துகொண்டுஇங்கேவரலாகாதென்று பயந்துகொண்டு தன்னைத்தவிர மற்றதெல்லாம் அனித்தியமென

ருபத்திபண்ணிக்கொண்டு முத்திபடையவேண்டுமென்று தில்லையை ச்சுற்றிக்கொண்டு தெற்குக்குளத்தங்கரையில்நின்று ஆடிப்பாடி ஆன ந்தங்கொண்டுஇருக்கிறர் அவனை என்னைப்போல்நினைத்து நீங்களெல் லோரும்போய் அழைத்துவாருங்க ளென்றுசொல்லி சுவாமிமறைந்தார் இப்படிகண்டகனவை மூவாயிரம்பேர்களும் பேரம்பலவாசல்வந்து ஒ ருவர்க்கொருவர் பேசிக்கொள்ளுவார்.

தரு இ-ம் சங்கராபரணம்-அடதாளம்,

கண்ணிகள்.

அதிசயமொன்றுகேளப்பா தீட்சதரோ
யர்ந்தராத்திரிப்போதி லென்னே-என்றன்
அதிபரவசமாகத்துதிபரவுமம்பல
வாணன்கனவில்வந்தா ருன்னே
வாஸ்தமெனக்குமிந்தவண்ணமாகக்கனவில்
வந்துரைத்தாரறிந்தேன் நாடி-உத
யாஸ்தமயமாகுமுன்னாருட்படிக்கு
அழைப்பதுத்தமமென்று ரோடி
அப்போதங்குவந்தவப்பண்ணுதீட்சதர்
ஆம்மிதுவும்நிச் சயந்தான்-ஐங்கோன்
செப்பியசொற்படிச்செந்தீவளர்த்திடச்
செய்யவேண்டுமவ சியந்தான்
அவசியமென்கிறீர்காரியந்தெரியாமல்
ஆருக்கிக்குமோ புலையன்-சிறந்த
தவசிரேஷ்டர்சூழுந்தலத்தினில்வருதெ
த்லைபத்தோ அவன்வந்தா ல்லைவன்
புத்தியுள்ளவனேபரமனுக்குயிர்த்தோழன்
பதருநசலி ,லிப்பார காட்சி-இவன்
சித்தத்தப்படிசெய்துசெனனக்கடைப்போம்
தெளிவீர்நீங்களிந்தச் சூட்சி
என்றுராகுசிவசங்கரதீட்சதர்
இன்னமூந்தாமச மேதேர-நீச்சன்
ஒன்றுலுந்திருச்சந்நிதிக்குவருவ
கொருக்காலுங்கட்குந் தகாதோ
சொல்லுமென்றுரவராருங்கட்குச்
சித்தந்தில்லைக் தேகம்-தெளிய

அல்லும்பகலுமோயாமேசாஸ்திர
　மாராய்பவற்றுமனோர　　　　　　　　சாகரம்
தரும்படிபேசிச்சந்தேகந்தெளிவது
　தத்தென்றுனாத்த　　　　　　　　மொழியே-நம்
பெருங்கூட்டமாகவே கூடிச்சென்றாரவர்
　பேதமறந்தொரு　　　　　　　　வழியே

வசனம்.

தில்லைமூவாயிரவர்கள் சாஸ்திரிமார்களிடத்திற் சந்தேகந்தெளிதல்.

விருத்தம்.

மறைக்கிழவரிலவிதழ் சென்றார்களங்கே
　மனுவிக்கியானிக ளாசீர்வாதஞ்செய்து
வந்தகாரியமேதோ உரைப்பீரென்ன
　மற்றுளானவர்தங்கள் கனவிற்றோன்றி
குறைந்தமதிப்புலசாதி வந்துதித்தோன்
　கோதிலாநந்தனென்போ னவனில்லன்பன்
கூறுமிவ்வூரெல்லை வரவருவான்நாளை
　கொணர்ந்தவனைத்தீமூழ்கச்செய்தேஅப்பால்
முறைமொழிசந்நிதியில் நம்முன்னாக
　விடுங்களென்று அருளிச்செய்தவர்மறைந்தார்
உணர்ந்தோர்முன்னிது தெரியச்சொல்லவந்தோர்
　மொழியுமாறுத்தரம் யாதென்றார்நீதி
அறிந்தவனோராநந்தப்படிக்கேசெய்வ
　தழகாகுமென்றனர் பின்மகிழ்ச்சியாலே
அந்தத்தில்லைமாநகரத் தெல்லைச்சுற்றி
　யாடுவார்நந்தனைத் தேடுவாரே.

திருநாளைப்போவார்புராணம்

விருத்தம்.

தம்பெருமான்பணிகேட்ட தவமறையோரெல்லோரு
மம்பலவர்திருவாயின் முன்பட்சமுடனின்று
எம்பெருமானருள்செய்த பணிசெய்வோமென்றேத்தி
தம்புரிவுபெருகவருந் திருத்தொண்டர்பாற்சார்ந்தார்

வசனம்.

தமருபிராணுகிய சபாநாதரிட்ட கட்டளையக்கேட்ட தவம்பொருந்
திய பிராமணர்களெல்லோரும் அம்பலவாணரது கோயிற்றிருவாசல் மு
யிசு

ண்புகூடி பயத்தோடும் நம்முடைய ஆண்டவரருள்செய்த ஊழியத்தைச் செய்வோமென்று வணங்கி அன்புமேற்பட்டிருக்கும் திருநாளைப்போவா ரைத் தில்லைமூவாயிரவர்கள் தேடவருகிறார்.

கீர்த்தனம்-இ-ம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்

பல்லவி.

தொண்டரைக்காண்கிலமே தில்லையில்வந்த தொண்டரைக்காண்கிலமே

அண்டசராசர மெங்கும்படியளந்து
மன்றுளாடியமன்னவர்க்கடிமை தொ
சொல்லும்பொருளுமற்றுச் சோதிமயங்கொண்
டல்லும்பகலுமற் றம்பலவாணன் தொ
அஷ்டதிசையும்பரி பூரணமாகவே
மட்டில்லாதுவளர்ந் தோங்கியநாதன் தொ
வரசியடக்கி நமவணைவழிகண்டால்
தேசிகவடிவுடன் தெரிசனந்தருவார் தொ
பாலகிருஷ்ணன்பணிந் தேத்றியபாதன்
கோலச்சிலம்பணியுங் குண்டலநாதன் தொ

கீர்த்தனம்-இ-ம-இந்துஸ்தான்-ரூபகதாளம்

பல்லவி.

திருநாளைப்போவார் தெரிசனங்காணத்
தில்லைமூவாயிர முனிகள்வருகிறார் திரு
பத்திவெள்ளமது கரைபுரண்டோடும்
பரமானந்தக்கடல் முழுக்காட்டும் திரு
அரகரசங்கர சிவனென்றுசொல்லும்
அநித்தியசடத்துக்க மாயத்தைவெல்லும் திரு
அடியவரோமெத்தப் பெரியவரென்று
அம்பலவாண ரருள்விடைகொண்டு திரு

இதுவுமது சிந்து

பதம்-இ-ம்-சௌராஷ்டிரம்-ஆதிதாளம்

பல்லவி.

தேடித்தேடித்திரிந்தார் பாரும்-நந்தனார்தம்மைத்
தில்லைமூவாயிரவர் யாரும்

காடுஞ்சதுர்வேதப்பிர — காசனை
நங்கைசிவகாமிப்பிரா — ணேசனை
ஆடும்பதநடன — சபேசனை
ஆவலாகத்தொழுதேவரும் — நேசனைத்-தேடி

சரணங்கள்

தண்டாமரைமலர்த் — தடமும்மாதர்களாடிக்
கொண்டானடித்திடு — மிடமும்அன்னமளிக்க
உண்டானந்தங்கூரு — மடமும்சோரர்பரவுஞ்
சண்டாளர்வாழும்வா — டிடமும்அன்றிச்சூத்திர
சாதிமுதலானபல — வாடையும்பல்லாண்டு
ஓதியுலாவிவரு — மேடைமறுவிக்யான
நீதியுணர்ந்தோர்கள் — மாடமின்னமும்பல
மாதிரிகளாகுந்திண்ணை — மேடைஉன்னதமாக
கொங்குமிகுத்தருவெங்குழுணைத்திடுஞ் — சோலைகருப்பஞ்சோலை
தங்குமுயர்ந்துகதித்திடும்வாழையின் — சோலை-தாழையின்சோலை
தெங்குமிலுப்பையுமொன்றுபொருந்திய — சோலை-காவினற்சோலை
துங்கமதானபலாக்கமுகோங்கிய — சோலைமற்றுள்ளசோலை
எங்குஞ்சுற்றிபபார்த்துமறையோர்கள் — தங்கள்தங்களங்கமேங்க

நதிபிதமும்

பொங்கரவணிதசிவசங்கரன் கிருபையிதென்றே — யோங்க

கூக்குரலிட்டுச்

சங்கையறச்சென்னியிற் கரங்களைக்குவித்தெங்களைத் — தாங்க

மனமுவந்து

இங்கேயெங்கள்பங்கினிலிருந்து பேழைவருத்தம் — நீங்க

கிருபைசெய்தற்கு

உன்னதேகடனென்று உவந்துகொண் — டாடி
உரியவேதமந்திராதிகள் — பாடி
முன்னஞ்சொன்னநந்தனர்வர — நாடி
மூளுங்கோடைக்காற்றெனவிசைந் — தோடி

தேடித்தேடித்திரிந்தார்பாரும்-நந்தனர்தம்மைத்

வசனம்.

இந்தப்பிரகாரம் தில்லை மூவாயிரவர்களும் தேடி அலுத்து ஓரிடத்தி ல்யாவருங்கூடி சுவாமியைத்துதிசெய்கிறதென்று நிச்சயஞ்செய்து தோத் திரஞ்செய்கின்றார்.

தரு-இ-ம்-கல்யாணி-அடதாளம்.

பல்லவி

உன்னதுமகிமையை யொருவரறிவார்களோ
உலகிலுள்ளோனாயனே

சரணங்கள்

கனவிலேவந்தெங்களுக்குச்சொன்ன அந்த
காரணமறிந்ததிகாலையிலே யெழுந்த
இனத்தார்நாங்கள்யாரு மிசைந்தொருமித் திந்த
எல்லைமுழுதுந்தேடி யிளைத்தோமெங்களுக் கந்த
இணையில்லாதநந்தனரு மகப்பட
வில்லையென்னசெய்வோம் ஸ்திரப்பட-உன்ன
அடையவர்திரிபுர மனலாகவே முடித்த
வன்பாகமான்மழுவுங்கையிலே பிடித்த
விடப்பாகனேகாளி வெட்கும்படி நடித்த
மெய்ப்பாதுயர்தவித்தா ளாயாவென்றே படித்த
வாறுநீயறிந்தருள்செய் ஐயனே
வனசநிகர்பதசரணத் துய்யனே-உன்ன
அன்னைசிவகாமியனுதினம்வளர் தில்லை
யம்பொன்னகர்வருவோற்கரன்றொரு தூய தில்லை
உன்னையன்றி யுலகத்துட்பொருளு மில்லை
யுத்தமனேயெங்கட் குரியதுணையு மில்லை
ஓதுநந்தனார்தம்மைவரச் செய்யும்
ஊழ்வினை தவிர்த்தவர்க்கு அருட் செய்யும்-உன்ன

வசனம்.

இவ்விதமாகச் சுவாமியைத்துதித்துத் தில்லைமூவாயிரவர்களனைவரு ம் நந்தனுரைத்தேடி யலுத்துவருமார்க்கத்தில் ஒதுப்புறமாக நின்றுக்கொண்டிருந்த நந்தனார் வேதியனாக்கண்டு தூரவிலகிநின்று தலைவணங்கிச் சொல்லுவார்.

விருத்தம்.

இட்டமுடனடிப்பணிந்துமனமொடுங்கித்தவம்புரியுந்தில்லைமன்று
ளட்டமிடநடராஜன்கனவின்கண்சொன்னமொழிநம்பிக்கொண்டு
இட்டமுடன்திருநாளைப்போவாரிடம்வேதியர்களெல்லாரும்போது
இட்டிநெருங்காதையுமென்றேவிலகியோர்வார்த்தைகேளீரொன்றுரர்

கீர்த்தனம்-இ-ம்-செஞ்சுருட்டி-ரூபகதாளம்

பல்லவி

கிட்டநெருங்கிவருகாதே சுவாமி-காதில்
கெட்டபேர்க்குப்பாவம்வரு மெனதுஜென்மம்பூமி-கிட்ட
கீட்டார்புகழுந்தில்லைதன்னில் செழித்துவாழும்வேதியர்காள்
இஷ்டடிதுவல்லவே யென்றுசொல்லவேணுமோபுலையன்-கிட்ட
உலகினில்கடைச்சாதியெந்தனுக் குவமையாருமில்லையே
பலவிததுஷ்கருமஞ்செய்து பாரில்வந்தபுலையன்-கிட்ட
வேலைசெய்துவுடம்புவளர்க்க வேணுமர்தநாயடியேன்
தோலுமெலும்புமிரும்புமுதுகில் சுமந்துஅலையும்புலையனேயே-கிட்ட
செத்தமாடிழுப்பதெனது சேவகம்பரம்படித்துயெல்லை
சுத்திவந்துதமுக்கடித்துச் சுடலைக்காக்கும்புலையனேயே-கிட்ட

வசனம்.

இப்படி வணங்கிச்சொல்லிய திருநாளைப்போவானைப்பார்த்து வேதியர்கள் சொல்லுவார்கள்.

கீர்த்தனம்-இ-ம்-சுருட்டி-ரூபகதாளம்

பல்லவி

சாதியிலுயர்ந்ததாலென்ன-இந்தப் பெரும்பெருமையில்லையே
சாதிப்பெருமைகொண்டதாலே சங்கரனோருகில்வந்து
ஆதரவுடன்வரங்களீய்ந்து அழைப்பாரோபார்ப்பாரோசேர்ப்பாரோ
அளிபெருகவேயீசன்கழலை யறிவிலுன்னியடிபணிந்து
தெளிந்திடாதபேனாமுத்தி தேடுமோநாடுமோகூடுமோ சாதியி

வசனம்.

இப்படிச்சொல்லியபின் தாங்கள்வந்தகாரியம்பேசுவார்.

திருநாளைப்போவார்புராணம்

விருத்தம்

ஐயரேயம்பலவாருடரரவிப்பொழுதணைந்தோம்
வெய்யவழலமைத்துமக்குத்தரவேண்டியெனவிளம்ப
னையுமெனத்திருத்தொண்டர்நானுய்ந்தேனெனத்தொழுதார்
தெய்வமறைமுனிவர்களுந்தீயமைத்தோமெனமொழிந்தார்

வசனம்

ஐயரே நடேசருடைய கட்டளையால் இப்போது வெவ்விதாகிய அ
க்கினியைமூட்டி உமக்கு அதில் முழுகும்படி கொடுக்கவந்தோமென்றுதெ

ல்ல இளகியமனதையுடைய திருநாளைப்போவார் அடியேன் கட்டை கடைத்தேறினேனென்று அவர்களைத் தொழுதார் தெய்வீகமாகிய வேதத்தையுணர்ந்த பிராமணர்களும் தீவளர்த்தினேமென்றுசொல்ல நந்தனார் கேட்டு சந்தோஷமடைந்து நானின்றைக்குத்தான் முத்தனானேனென்று வேதியர்களைப்பார்த்துச்சொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-பியாகு-ஆதிதாளம்

பல்லவி.

கண்டேன்கலிதீர்ந்தேன்-பவக்-கடல்கரையேறிவந்தேன் கண்
சோதிமறைமுடிவாஞ் சொல்லிரந்திடுமீசன்
பாதம்பணிவிடைசெய் பாக்கியவானுமைக் கண்
எல்லையைக்காணுமுன்னே யிருள்விலகுமுங்கள்
சொல்லைக்கேட்டுமுன்னே துன்பங்கள்தீர்த்திடக் கண்
கள்ளங்கருகச்செய்யுங் கண்ணுதலேயுங்கள்
உள்ளங்குடியாய்க்கொண்டாருங்கள்தெரிசனம் கண்

வசனம்

நந்தனார் நான் சின்னசாதியாயிருந்தபோதிலும் தெய்வமிரங்கிற்றென்றுசொல்லுவார்

கீர்த்தனம்-இ-ம்-கனுசரி-ஆதிதாளம்

எனக்குமிரங்கிற்றே-நான்மெத்த-ஏழைசாதியல்லவோ
தனக்குள்தானாயிருந் தகிலப்பிரபஞ்சமுந்
தன்னுளடக்கிய பொன்னம்பலவன்கிருபை எனக்கு
அல்லுமபகலுமருந்தவஞ்செய்தினு
மறியாரொருவருமம்பலத்தெய்வம் எனக்கு
நான்குமறைமுடிவும் நானறியேனென்
றோதியவுண்மை உலகமறிய எனக்கு

வசனம்

நந்தனார் என்னதவஞ்செய்தேனோ இவ்வுலகின்கண் யாவருக்கும் கிடைக்காதபாக்கியம் கிடைத்ததென்றுசொல்லுவார்

கீர்த்தனம்-இ-ம்-ஆகிரி-ரூபகதாளம்

அம்பலவாணனைத் தென்புலியூரானை நம்பிப்பணிந்தேனே
அர்ச்சனைசெய்து கும்பிட்டிருந்தேனே
தில்லைப்பதியில்வந்து எல்லைகடந்தேனென்று
அல்லலறுத்தேனே-சஞ்சித-வினையெல்லாம்வறுத்தேனே
தாண்டவமாடின ஆண்டவன்சேவடி
வேண்டித்துதித்தேனே-மூக்குணகைகளைத்-தாண்டிக்கதித்தேனே

சந்தனைநனைதென்றெந்தவேளையுமாயுந்
சிந்தைநழுவிற்றோ சேர்ந்தவனென்று தந்தைநழுவிற்றோ
தெள்ளுந்தமிழ்ப்பாடி யுள்ளமுருகியுள்ளில்
கள்ளங்கருகிற்றோ கருத்திலெட்டா வெள்ளம்பெருகிற்றோ
ஆசைவலையைப்போட்டு மோசப்படுத்துஞ்சில
பாசங்குலைத்தாரோ-அளவிடாத கிலேசந்தொலைத்தாரோ
பெண்ணரிடமாலுக் கொண்ணுந்தெனச்சடைத்
தண்ணைத்தணைந்தாரோ-கருணைபொங்குங் கண்ணாலணைத்தாரோ
அடுத்துவந்தவனென்று பிடித்தபேய்களையோட்டி
தடுத்தாளக்கொண்டாரோ-பரம்பதங் கொடுத்தாளக்கண்டாரோ

திருநாளைப்போவார்புராணம்

விருத்தம்.

மறையவர்கண்மொழிந்ததற்பின் றென்றிசையினமதிற்புறத்துப்
பிறியுரிஞ்சுந்திருவாயின் முன்னாகப்பிஞ்ஞகர்தன்
நிறையருளால்மறையவர்க ணெருப்பமைத்தகுழியேய்த்தி
யிறையவர்தாள்மனங்கொண்டே யெரிசூழல்வலங்கொண்டார்

வசனம்.

அப்படிப் பிராமணர்கள்சொல்லினபின்பு தென்திசையிலுள்ள மதி லின்புறத்திலே சந்திரனைத் தவழ்ந்துபோகும்படி உயர்ந்திருக்கும் திருக்கோபுரவாசலுக்கு முன்னே சுவாமியின் நிறைந்தயிருடையோடுகூடிய கட்டளையால் பகர்ந்திருக்கின்ற நெருப்பின்குழியை அடைந்து நடேசருடையதிருப்பாதத்தை மனதில்தியானித்து அக்கினியைச்சுற்றி வலமாக வந்தார்.

இதுவுமது-விருத்தம்,

கைதொழு தநடமாடுங் கழலுன்னியழல்புக்கார்
எய்தியவப்பொழுதின்க ணெரியின்கண்இம்மாயப்
பொய்தகையுருவொழித்துப் புண்ணியராய்முனிவடிவாய்
மெய்திகழ்மூந்நூல்விளங்க வேணிமுடிகொண்டார்.

வசனம்.

கையார்க்கும்பிட்டு நடனஞ்செய்கின்ற நடேசரது திருப்பாதங்களை மனதில் உறுதியாகநினைத்து அக்கினியில்புகுந்தார் அப்படிச்செய்தபோது அந்தநெருப்பில் இந்த உலகசம்பந்தமாகிய நிலையில்லாத உடலத்தை யொழித்துப் புண்ணியஞ்செய்கின்ற பெருமைபொருந்திய பிராமணமுனியின்வடிவாய்த் தேகத்தில் பூநூல்விளங்கச் சடைமுடியோடும் எழுந்தார்.

ருமைபொருந்திய ஆகாசத்தில் அந்தரதுந்துமியின் சேர்விடமானதுஉ ண்டாயிற்று தேவர்கள் சந்தோஷமாய் ஆரவாரித்து அழகாயிருக்கின்ற கற்பக விருட்சத்தின் குளிர்ச்சிபொருந்திய மலர்களை வருஷயாகச்சொ ரிந்தார்கள்.

இதுவுமது-விருத்தம்.

திருவுடையதில்லைவாழந்தணர்களுந்தொழுதார்
பாவரியதொண்டர்களும்பணிந்துமனங்களிப்பயின்றார்
அருமறைசூழ்திருமன்றுளாடுகின்றகழல்வணங்க
வருகின்றார்திருநாளைப்போவாராமறைமுனிவர்.

வசனம்,

ஞானசம்பத்தையுடைய தில்லையில்வாழும் பிராமணர்கள் கைகூப் பினார்கள் பாவுதற்கரிய மற்றைச்சிவபத்தர்களுந்தொழுதுமனதில்களி ப்படைந்தார்கள் வேதங்கள்முழங்குகின்ற கனகசபையில் ஆடுகின்ற பாதத்தைவணங்கும்பொருட்டுத் திருநாளைப்போவாராகியஒருவேதமு னிவர்வருகையில் ஆனந்ததாண்டவத்தைத வருணித்துச் சொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-தேசிகதோடி-ஆதிதாளம்

பலலவி.

தாதெய்தெய்தெய்யென்றுடுவார்-அவர்
தத்தித்தெய்தத்தித்தெய்யென்றுடுவார்
ஆதிபராபரமாகியசித்து
ஆனந்தக்கொண்டொருகாலையெடுத்துத் — தாதெய்
அண்டசராசரமெங்கும்நடுங்க
ஆதிசேடனார்முடிகணெருங்க — தாதெய்
சிலம்பொருந்தியமுனிவர்கொண்டாட
திங்களைச்சூடியசெஞ்சடையாட — தாதெய்
பார்புகழிதில்லைசிதம்பரநாதன்
பாலகிருஷ்ணன்பணிந்தேற்றியபாதன் — தாதெய்

கீர்த்தனம்-இ-ம்-பந்துவராளி-ரூபகதாளம்.

பல்லவி,

குஞ்சிதபாதத்தைத்தாரும்-மன-சஞ்சலபாவத்தைத்தீரும்

அனுபல்லவி.

செஞ்சிலம்பசையக் — கனகசபைதனில்
ஜெனுதத்தகஜெனுதந்திமி — திமிதத்தேமென்றுடிய-குஞ்

சரணங்கள்,

நெஞ்சிற்கவலையை — யாற்றும் இந்த
வஞ்சப்பிறவியை — மாற்றும்-நாளும்
வஞ்சிசிவகாம — வல்லிமகிழ்ந்திடும்
தஜ்ஜெம்தக-ஜெந்தரிகிட-தக்கிடதோ — மென்றுடிய-குஞ்

## திருநாளைப்போவார்புராணம்.

விருத்தம்.

தில்லைவாழந்தணர்களுடன்சொல்லச்சென்றெய்திக்
கொல்லைமான்மழுபுரிக்தார்கோபுரத்தைத்தொழுதிறைஞ்சி
ஒல்லைபோயுட்புக்காருலகுய்யநடமாடும்
எல்லையினைத்தலைப்பட்டார்யாவர்களுங்கண்டிலரால்

வசனம.

சைவபுராணமாகிய பெரியபுராணத்தில் திருநாளைப்போவார்நாயனாரென்னுமியற்பெயர்சேக்கிழார்சுவாமிகள் சொல்லியிருப்பதால்இடையின்நந்தமாமுனியென்றுவழங்குகின்ற நாளைப்போவார்தில்லைமூவாயிரமுனிவர்களோடேகூடிபொன்னம்பலம்வந்தார் அதற்கப்பால்அவனைக்கண்டபேர்களில்லையென்று பெரியபுராணம்பாடியருளியசேக்கிழார்சுவாமிகள்சொன்னது அந்தத்திருநாளைப்போவாரென்னு முனிவரானவர்புரட்டாசிமாதம் உரோகணிநட்சத்திரத் தில்கனகசபையில்வந்துகற்பூரஜோதியைப்போல்தோன்றி சிவசாரூப்பியத்தையடைந்தாரென்று உபமன்னியமகாரிஷி புண்ணியபத்தர்விலாசத்திலேயும் சொல்லப்பட்டிருக்கின்றது.

இதுவுமது-விருத்தம்

அந்தணர்களதிசயித்தாரருமுனிவர்துதிசெய்தார்
வந்தனைந்ததிருத்தொண்டர்தம்மைவினைபாசமறுத்து
சுந்தரத்தாமரைபுரையுந்துணையடிகடொழுதேத்த
வந்தமில்லாவானந்தப்பெருங்கூத்தருள்புரிந்தார்

வசனம.

மறையோர்கள் ஆச்சரியப்பட்டார்கள்அரியமுனிவர்கள் தோத்திரஞ்செய்தார்கள்முடிவில்லாத ஆனந்தத்தாண்டவஞ்செய்தருளுகிறசபாநாதரதுகட்டளையால்வந்தடைந்த திருநாளைப்போவார்க்குத்தீவினையாகியகளங்கத்தைநீக்கிய அழகாகியதாமரைமலரையொத்த இரண்டுபாதங்களையுந் தொழுதிருக்கும்படி அருள்செய்தார்.

விருத்தம்.

மாசுடம்புவிடத்தீயின்மஞ்சனஞ்செய்தருளியெழுந்
தாசின் மறைமுனியாகியம்பலவர்தாளடைந்தார்
தேசுடையோர்வாழ்த்தத்திருநாளைப்போவாரும்
பாசுகலமுயன்றுதிருநடங்கண்டேசிழ்வுற்றார்.

வசனம்.

தமக்குமுன்னிருந்தஉடலமாகியமாசுதீரும்பொருட்டுஅக்கினியாகியதிருமஞ்சனமாடியெழுந்து குற்றமற்றபிராமணமுனிவராகிதேசரு

டையதிருவடியையடைந்தவராகியதிருநாளைப்போவாருடையபதத்தைப்புகழ்ந்து தீவினையாகியகயறு அறும்படி தில்லைமூவாயிரவர்கள்போற்றிசெய்துக்கொண்டிருந்தார்கள்.

வாழிவிருத்தம்.

பங்கயமாதவர்வாழி பார்மகளுமையள்வாழி
செங்கண்மாலயனும்வாழி தேவர்கந்தருவர்வாழி
தங்குநான்மறைகள்வாழி தாரணியரசர்வாழி
பொங்குநூல்வல்லோர்வாழி போதமெந்நாளும்வாழி

மங்களம்.

ஓரடி-தரு, இ-ம்-அசாவேரி-ஆதிதாளம்.

பல்லவி,

திருநாளைப்போவாருக்கு ஜெயமங்களம்-எங்கள்
தில்லைமூவாயிரர்க்குச் சுபமங்களம்

அநுபல்லவி.

இருடிகள்முனிவர்க ளீததிசயமென
விருகரமுடிமிசை மருவத்துதிசெய்கன
பரவும்ப்பாசப் பிரமங்கள்துதித்திடும்
பரமனுமேம் பலத்தினில்கதித்திடும்-திரு

சரணங்கள்.

திருவாசகமுந்திருக் கோவைபாடினவர்க்கும்
சீர்காழியிலுதித்துச் சிறந்தசம்பந்தருக்கும்
ஒருமாதிடந்தூதுக் குகந்துவிடுத்தவர்க்கும்
ஔவமொப்பிலர்த்திரு நாவுக்கரசருக்கும்
உரியமறைக்கு முயர்கலைகட்கும்
உலகபதிக்கும் உவணபதிக்கும்
ஒதுசங்கரசூரியர் முனிவர்களுக்கும்
நீதிலாதபா வலர்முதலனைவர்க்கும்-திரு

# நந்தனார்திவ்வியசரித்திரக்கீர்த்தனை

## முற்றிற்று.



உ

சிவமயம்





# சிதம்பரக்கும்மி.

விநாயகர் துதி.

சீர்மேவுந்தில்லையம்பலத்தின்-அன்பு
சேர்க்குமித்தமிழ்ப்பாட
கார்மேவுமேலைக்கோபுரவாசல்
கற்பகப்பிள்ளையார்காப்பாமே.

முக்குறுணிவிநாயகர் தோத்திரம்.

சர்க்கரைமோதகந்தேங்காயுங்-கொண்டு
சந்நிதிமுன்பாகத்தான்படைத்து
முக்குறுணிப்பிள்ளையானைவேண்டி
முழங்கிக்கும்மியடியுங்கடி

சுப்பிரமணியர் துதி.

கோலமயிலின்முதுகேறி-வந்து
கும்பமுனிக்கு அருள்செய்யும்
பாலசுப்பிரமண்யன்பீஜாட்சரத்தைப்
பாடிக்கும்மியடியுங்கடி.
கங்காதேவிக்குக்கைகூப்பி-யாருங்
கையெடுத்துள்ளோபாணம்பண்ணி
தங்கமற்சிவகாமிசந்நிதி
சார்ந்துகும்மியடியுங்கடி.

கருதுஞ்சுருதிக்கெட்டாத-சிவ
காமசவுந்தரிவாசலிலே
விருதுபேசியேசிறுகுழந்தைகள்
வேதம்படிக்குதுபாருங்கடி ௬

நாலுபுறத்திலுங்கோபுரமா-மதி
நடுவிலெங்கனுமாளிகையாம்
காலோராயிரங்கொண்டொருமண்டபங்
கட்டியிருக்குதுபாருங்கடி ௭

தூயமறைமுதலாராய்ந்து-இங்கே
துலங்கியமூவாயிரவர்
ஞாயம்பொருந்தியதேவசபைவந்து
நாடிக்கும்மியடியுங்கடி ௮

சாந்துப்பொட்டுதளதளவென-நல்ல
சந்தனவாடைகுமுகுமென
கூந்தலழகிகளெல்லோருங்காலைக்
குவித்துக்கும்மியடியுங்கடி ௯

அஸ்தகடகம்பளபளவென்ன-சொல்லும்
அரைதோள்மாலைதளதளவென்ன
விஸ்தாரமாகநின்றுக்கொண்டுகையை
விசிக்கும்மியடியுங்கடி ௰

கைதனில்விபூதிப்பையுங்கொண்டு-அவர்
கண்டத்தில்ருத்திராட்சமாலைபூண்டு
வைதீகபூசைசெய்கின்றதீட்சதர்
வாழக்கும்மியடியுங்கடி ௧௧

கோவிலுக்குநாலுபேர்களுண்டாம்-அவர்
குறித்தமுறையாய்ப்பூசைசெய்ய
பாவித்தபின்பவர்வேறொருவர்வசப்
படுத்துவாரென்றேகும்மியடியுங்கடி ௧௨

ஆண்டுக்குள்ளாரபிஷேகமுண்டாம்-பின்னும்
அதிலேரண்டுத்திருநாளாம்
வேண்டிவந்தார்கலிதீருமென்று
விரைந்துகும்மியடியுங்கடி

பூமிபுகழ்ந்திடுந்தில்லைப்பதி-அது
பூலோகக்கயிலாசமென்று
தாமரைப்பூவினில்வாழ்கின்றலட்சுமித்
தாயார்சந்நிதிபாருங்கடி ௧௩

